

# பழங்காசு


சிறப்பாசிரியர் :
வரலாற்று வித்தகர் ம. இராசசேகர தங்கமணி

திருவள்ளுவர் ஆண்டு 2032 துலை (ஐப்பசி) திங்கள் (அக்டோபர் 2001)

பேழை : 1 (இதழ் எண் : 4) காசு : 4




வீரராயப்பணம்



தீண்டாமைக் கொடுமைக்கு
ஒரு சான்றாவணம்


ஆசிரியர்
மரு. சுசீலாதேவி சீனிவாசன்

✆ 0431- 442043

(தனிச்சுற்றுக்கு மட்டும்)

# பழங்காசு

நாணயவியல், வரலாற்றியல், காலாண்டிதழ்

1/385, சீதக்காதி தெரு, காட்டூர் (தெற்கு), திருச்சிராப்பள்ளி – 620 019.

*சிறப்பாசிரியர்:* வரலாற்று வித்தகர் கருவூர் **ம. இராசசேகர தங்கமணி** M.A.,

*ஆசிரியர் :* மரு. **சுசீலாதேவி சீனிவாசன்**




## நண்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்

பழங்காசினைச் சீராட்டி வளர்த்தெடுக்க, தாயகத்தின் பெருமைதனைப் போற்றும் உங்களையும் இப்புனிதப் பயணத்தில் எங்களோடு இணைத்துக் கொள்ள விழைகிறோம்.

| | |
|---|---|
| ஓராண்டு நன்கொடை உருபா | **50/-** |
| ஈராண்டு நன்கொடை உருபா | **100/-** |
| வாழ்நாள் நன்கொடை உருபா | **500/-** |
| புரவலர் நன்கொடை உருபா | **1000/-** |

கேட்பு வரைவோலை (D.D.) பழங்காசு பெயரிலும், பணவிடை (M.O.) மட்டும் சுசீலாதேவி சீனிவாசன் பெயரிலும் அனுப்ப வேண்டுகிறோம்.

*பழங்காசு வெளிவர, தொடர்ந்து தொய்வின்றிப் பணியாற்ற உங்களின் பங்களிப்புகளை விரைந்து அளித்திடுவீர்! மகிழ்ந்து அளித்திடுவீர்!*

இது ஓர் இலாப நோக்கு இதழல்ல. நாட்டுப்பற்றின் வெளிப்பாடு.

## பழங்காசு முன்னிதழ் வேண்டுவோர் கவனத்திற்கு....

முன்னிதழ்கள் வேண்டுவோர் ஓர் இதழுக்கு உரூ.15/–ம், நான்கு இதழ்களுக்கு உரூ.50/–ம் அனுப்புக. தேவையான இதழ் எண்களை மறவாது குறிப்பிடுக.

(தனிச்சுற்றுக்கு மட்டும்)

# பழங்காசு

நாணயவியல், வரலாற்றியல் காலாண்டிதழ்

பேழை : 1 துலை (ஐப்பசி) தி.பி. 2032 அக்டோபர் 2001 காசு : 4

## ஆவண செய்யுமா அரசு?

நண்பர்களுக்குத் தோழமை வணக்கங்கள்.

மாறிவரும் உலகில், அறிவியல் கண்டுபிடிப்புகள், மக்கள் மத்தியில் 'நுகர்வு பண்பாட்டினை' வெகு விரைவாக வளர்த்து வருவதை நாம் உணர்கிறோம். மனிதநேயம், பண்பாடு, நாட்டுப்பற்று ஆகியன பின்னுக்குத் தள்ளப்பட்டு, 'தான், தன் சுகம்' மட்டுமே முன்னிறுத்தப்படுகிறது. இந்த அபாயகரமான இலக்கு நோக்கி விரைவதால், நமது நாடே, ஏன் உலகமே எதிர்காலத்தில் இருக்குமா என்பது ஐயப்பாடே!

இந்த மோசமான விளைவுகள் தோன்றாமல் தடுக்க இளம்பருவம்தொட்டே, கற்பிக்கப்படும் கல்வி முறைகளில் ஆக்கப்பூர்வமான மாறுதல் தேவை என்பதை அறிஞர் பலரும் உணர்ந்தே உள்ளனர். நாட்டுப்பற்றை வளர்த்திட, தாய்நாட்டின் உண்மை வரலாறு கற்பிக்கப்பட வேண்டும். மனித நேயத்தை வளர்க்கும் இலக்கியங்கள் பள்ளி, கல்லூரிகளில் பாடமாக்கப்பட வேண்டும்.

இராகுலசாங்கிருத்தியான் முதலிய ரேறிஞர்களால் 'பொய்க்கலை' என வருணிக்கப்பட்ட 'சோதிடம்' இன்றையப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தில் அரசால் சேர்க்கப்பட உள்ள நிலையில், நாணயவியலுக்கென்று ஒரு 'பட்டயப் படிப்பு'க்கூட இல்லாதது பெருங்குறையேயாகும். கல்வெட்டியலுக்கு உள்ளபட்டயக் கல்வியை, பட்டப்படிப்பு, பட்டமேற்படிப்பாக மாற்ற வேண்டும்.

பழங்கால இலக்கியங்களும், கல்வெட்டுகளும் பிற வரலாற்றுச் சான்றுகளும் ஒருங்கிணைக்கப்பட்டு, உறுதியான ஆதாரங்களின் அடிப்படையில் தாய்நாட்டின் புதிய வரலாறு எழுதப்பட வேண்டும். ஆட்சியாளர்கள் மாறினாலும் வரலாறு நிலையானதாக இருக்க, விருப்புவெறுப்பற்ற நிலையில், வரலாறு படைக்கப்பட வேண்டும். இவ்வாறு எழுதப்படும் வரலாறே மக்களுக்கு பண்பாட்டையும், நாட்டுப்பற்றையும் ஊட்டிடும் என்பது திண்ணம். இதற்கெல்லாம் ஆவன செய்யுமா அரசு?

அன்புடன்

15.10.2001

திருச்சிராப்பள்ளி–19.

சுசீலாதேவி சீனிவாசன்



# களப்பிரரின் ஓர் அரிய பொற்காசு

- பேரா. க.ஆ. திருஞானசம்பந்தம்

## களப்பிரர் யார்?

கருநாடக மைசூர் நாட்டில் அமைந்துள்ள சிராவண பெல்கோலாவிற்கு அண்மையில் தொட்டபெட்டா (பெரியமலை) சிக்கபெட்டா (சிறிய குன்று) என்றும் இரு மலைகள் உள்ளன. இச்சிக்கபெட்டா குன்றிற்குச் சந்திரகிரி மலை என்பதும் பெயர். தொன்மைக் கன்னடக் கல்வெட்டுக்களில் சந்திரகிரிக்குக் களவாப்பு என்ற பெயர் வழங்கியது. களவாப்பு என்பது கன்னடமொழியில் களபாப்பு என அழைக்கப்பட்டது. மேலும் கருநாடக மாநிலத்தில் பேலூர் மாவட்டத்தில் இருந்த ஹால்மிதி என்ற ஊரில் கிடைத்த கல்வெட்டு இப் பகுதியில் களப்போரா இனத்தவர் வாழ்ந்தனர் என்பதைக் குறித்திடும். கடம்ப வமிசத்து அரசன் காகுத்த வருமனுக்கு (கி.பி425-450) களப்போரர்- களின் எதிரி என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது. வேள்விக்குடிச் செப்பேட்டிலும், தாளவாய் புரம் செப்பேட்டிலும் காணப்பெறும் களப்பிரர் என்னும் பெயர், களப்போரர் என்னும் கன்னடச்சொல்லின் தமிழ் வழக்கேயாகும்.

## களப்பிரரின் தமிழக வெற்றி

கருநாடக மாநிலத்தின் கோலார்ப் பகுதியில் இருந்து நந்திமலைப் பகுதியை ஆண்டுவந்தவன் களப்பிரன்; நந்திமலைக்காவலன் அச்சுதன் — களப்பிரன் என்னும் கலியரசன் — நால்வகைப் படையுடன் தமிழகத்தின் மீது படையெடுத்து வந்து மதுரையையும் (பாண்டிய மன்னனையும்) ஏனைய வேந்தரையும் சிறைப்பிடித்துத் தமிழகத்தில் தன் ஆட்சியை நிறுவினான் என்னும் குறிப்புகளை பெரியபுராணமும், கல்லாடமும், யாப்பருங்கல விருத்தியுரை மேற்கோள் பாடலும் பின்வருமாறு குறித்திடும்.

பெரியபுராண ஆசிரியர் சேக்கிழார், மூர்த்திநாயனார்புராணத்தில் மூன்று பாடல்களில் மதுரை நகரைக் கருநாடகத் தலைவன் ஒருவன் நால்வகைப் படைகளுடன் வந்து பாண்டிவேந்தனைத் தோற்கடித்து மதுரையில் தன் ஆட்சியை நிறுவியதுடன் சமண சமயத்தைப் பரப்பி, சிவனடியார்களுக்கும் ஊறுவிளைவித்த செய்தி குறித்திடப்பெறுகின்றது.

"கானக்கடிசூழ் வடுகக் கருநாடர் காவல்
மானப்படை மன்னன் வலிந்து நிலன் கொள்வானாய்
யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் திரண்ட
சேனைக் கடலும் கொடு தென்திசை நோக்கி வந்தான்

வந்துற்ற பெரும்படை மண்புதையப் பரப்பி
சந்தப் பொதியில் தமிழ் நாடுடை மன்னன்வீரம்
சிந்தச் செருவென்று தன்னாணை செலுத்தும் ஆற்றால்
கந்தப் பொழில்சூழ் மதுராபுரிக் காவல் கொண்டான்.

வல்லாண்மையில் வண்தமிழ்நாடு வளம்மடுத்து
நில்லா நிலை ஒன்றி இன்மையின் நீண்ட மேரு
வில்லான் அடிமைத்திறம் மேவிய நீற்றின் சார்பு
செல்லாது அருகந்தர் திறத்தினில் சிந்தை தாழ்ந்தான்"

"படைநான்கு உடன்று பஞ்சவன் துறந்து
மதுரை வவ்விய கருநடர் வேந்தன்
அருகர்ச் சார்ந்து நின்று அரன்பணி அடைப்ப"

என்னும் கல்லாட ஆசிரியர் கூற்றின்படி, மதுரை வவ்விய கருநடவேந்தன் சமணம் சார்ந்து, அரன்பணி செய்வதைத் தடுத்தான் என்பதை நாம் அறிகிறோம்.

### சோழநாட்டில் களப்பிரர்

புத்த தத்தர் என்னும் பௌத்தத்துறவி சோழநாட்டில் இருந்த பூதமங்கலம் என்னும் ஊரில் இருந்த பௌத்த மடத்தில் தங்கியிருந்தபோது பாலிமொழியில் அபிதம்மாவதாரம், விநயவினிச்சியம் என்னும் இரண்டு நூல்களை எழுதியுள்ளார். இந்தப் புத்ததத்தர் இலங்கை அரசன் சிறுகுட்டன் (கி.பி. 409 - 430) காலத்தில் வாழ்ந்தவராவர். விநயவினிச்சியம் என்னும் நூலை சோழநாட்டில் புகார் நகர அரசன் களப்ப குலவேந்தனாகிய அச்சுத விக்கிரந்தன் ஆட்சி புரிந்து கொண்டிருந்தபோது இயற்றியதாகக் கூறுகிறார். புத்ததத்தரின் சமகாலத்தவராகிய புத்தகோசரும் தம்முடைய நூலில் சோழநாட்டை அரசாண்ட களப்பிர அரசன் ஒருவனைக் குறிப்பிடுகின்றார்.

### அச்சுதன் மூவேந்தரை வென்ற செய்தி

இந்த அச்சுதன் சேர, சோழ, பாண்டியரை வென்று தமிழகம் முழுவதும் ஒரு குடைக்கீழ் கொண்டு வந்தான் எனவும், புலி, கயல், மீன் இலச்சினைகளைத் தன் கொடியில் எழுதிக்கொண்டான் என்றும் யாப்பருங்கல விருத்தியுரை ஆசிரியர் மேற்கோள் காட்டியுள்ள பாடல் தெரிவிக்கிறது. இப்பாடலின் ஆசிரியர் விளக்கத்தனார் ஆவர்.

"அடுதிறல் ஒருவ நிற்பரவுதும் எங்கோன்
தொடுகழல் கோடும்பூண் பகட்டெழில் மார்பில்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதின
தொன்றுமுதிர் கடலுலகம் முழுவதுடன்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே"

யாப்பருங்கல விருத்தியில் மற்றொரு பாடல் அச்சுதக் கோ எனவும் நந்திமாமலைக் காவலனைப் போற்றும் புதுமையைக் காண்போம்.

"பொருகுடை வளாகம் ஒருகுடை நிழற்றி
இருபிறப்பாளர்க்கு ஈந்து மனமகிழ்ந்து
அருள்புரி பெரும்புகழ் அச்சுதக் கோவே
நந்திமாமலைச் சிலம்ப
நந்தி நிற்பரவுதல் நாவலர்க்கும் அரிதே"

இப்பாடல் மூலம் அச்சுத விக்ரந்தன் ஏனைய சமயத்தையும் அந்தணர்களையும் ஆதரித்தான் என்பதை நாம் அறிய முடிகிறது.

**வேள்விக்குடிச் செப்பேடு** கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் நெடுஞ்சடையன் பராந்தகனால் வெளியிடப்பட்டது. இவ்வேள்விக்குடி சாசனத்தால் கி.பி. 575-இல், களப்பிரர்க்கும் பாண்டியன் கடுங்கோனுக்கும் இடையே நிகழ்ந்த போர் பற்றி அறிய வாய்ப்பு ஏற்படுகிறது.

**"அளவரிய ஆதிராசரை அகல நீக்கி அகலிடத்தை**
**களப்ரன் என்னும் கலியரசன் கைகொண்டு"**

எனவரும் வேள்விக்குடிச் செப்பேட்டு வரிகளால், தமிழகத்தை ஆண்டு கொண்டிருந்த கணக்கற்ற அரசர்களை அகற்றி, அவர்தம் நாட்டைக் களப்பிரன் ஆண்டான் என்பதையும் உணர முடிகிறது. தென்னகம் முழுதும் ஆண்ட பெருவேந்தராக களப்பிரர் விளங்கினர் என்பதை இலக்கிய மேற்கோள் பாடல்களும் வேள்விக்குடிச் சாசனமும் நமக்கு உணர்த்துகின்றன. இக்கூற்றுக்கு அரண் செய்வதுபோலத் "தமிழ்நாவலர் சரிதை" அச்சுதக் களப்பாளன் முடியுடை மூவேந்தர்களையும் வென்று சிறைப்படுத்தினான் என்று குறிக்கிறது.

**களப்பிரரை முறியடித்த பெருவீரர்கள்**

தொண்டைநாட்டை ஆண்டுவந்த சிம்ம விஷ்ணுவை (கி.பி. 575-615) வேலூர்ப் பாளையச் செப்பேடு களப்பிரரை முறியடித்த மாவீரன் என்று குறிப்பிடுகிறது.

**வேள்விக்குடி சாசனம்**

கடுங்கோன் என்னும் பாண்டிய மன்னன் களப்பிரர் என்னும் கலியரசனை வெற்றி கொண்டு மீண்டும் பாண்டி மண்டலத்தில் பாண்டியர் ஆட்சியை நிறுவினான் என்பதை,

**"அளவரிய ஆதிராஜரை யகல நீக்கி யகலிடத்தைக்**
**களப்ர னென்னும் கலியரசன் கைக்கொண்டதனை யிறக்கியபின்**
**படுகடல் முளைத்த பகுதிமேல் பாண்டியாதிராஜன் வெளிப்பட்டு**
**..............தரணி மங்கையைப்**
**பிறர் பாலுரிமை திறவிதினீக்கித்**
**தன் பாலுரிமை நன்கனம் அமைத்த**
**மானம் பேர்த் தானை வேந்தன்**
**ஒடுங்கா மன்னர் ஒளிநக ரழித்த**
**கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்"**

எனக் குறிப்பதன் வாயிலாகக் களப்பிரரைக் கடுங்கோன் என்னும் பாண்டிய மன்னன் பாண்டிய நாட்டினின்று துரத்தினான் என்னும் செய்தியை அறிய முடிகிறது.

இச்செய்தியை மேலும் அரண் செய்வதுபோல,

**"களப்பாழரைக் களைகட்ட மற்றிரள் தோள்**
**மாக்கடுங் கோன் மானம்**
**போர்த் தருளிய கோன்'**

எனத் தளவாய்புரச் செப்பேடுகள் கடுங்கோனைப் போற்றும்.

**களப்பிரர் பின்பற்றிய சமயம்**

"கலியரசன் என்னும் பெயரில் உள்ள கலி என்பது ஓர் அரச மரபைக் குறிக்கும். களப்பிரர் என்ற பெயர் களவர் என்னும் தமிழ்ச்சொல் பழங் கன்னடத்தில் களபரு என்று வழங்கிப் பின்னர் களப்பிரர் என்றானதாகும். இக்களவர் கர்நாடக மாநிலத்தின் நந்திமலைப் பகுதியை ஆண்ட ஒரு மரபினராவர். இந்நாட்டிற்கு களபிருநாடு, களபப்பு நாடு என்று பிற்காலத்தில் பெயர் வழங்கியதாகக் கன்னடப் பொறிப்புகள் பலவற்றிலிருந்து தெரிகிறது.

நெடுஞ்சடையன் பராந்தகன் வேள்விக்குடிச் செப்பேடுகள் களப்பிரான் என்னும் கலி அரசன் என்று களப்பிரர்களைக் குறிப்பிடுவதும், கலிகுலம் என்ற பெயருக்குக் காரணமான கலி என்ற சொல் கலிதேவன் என்னும் சமணசமயக் கடவுள் ஒருவரைக் குறிப்பதாகும் (எபிகிரபியா இண்டிகா தொகுதி 15, பக்கம் 343) இவர்களுள் ஓரிரு அரசர்கள் புத்தமதச் சார்புடையவர்களாக விளங்கினர்.

**களப்பிரரின் குலமரபுச் சின்னம்**

களப்பிரர் கொங்கணி அரசர்களளைப் போல, யானையையே தமது அரச சின்னமாகக் கொண்டனர். யானை சமணர்களால் போற்றப்பட்ட ஒரு சின்னம். ஆதலால் இவர்களும் இதையே அரச சின்னமாகக் கொண்டனர் (வீயாரெம், கொங்குநாட்டுக் கவுண்டர்கள் பக்கம் 76, 78)

**களப்பிரரின் அடையாளமலர்**

"விரியினர் கோங்கமும்" என்னும் தொடர் யாப்பருங்கல விருத்தியுரை மேற்கோள் பாடல் தொடரால் களப்பிரரின் அடையாள மாலை மலர் 'கோங்கம்' என்பது பெறப்படுகிறது.

காடுகளில் கோங்கம் மிகுதியாக வளர்ந்திருக்கும். இளவேனில் பருவம் தொடங்கியவுடன் இது மிகுதியாகப் பூக்கும். இதன் முகை உருண்டிருக்கும். எனவே இது மகளிரின் நகிலுக்கு உவமையானது. இத்தகைய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

**"வேனில் கோங்கு" (புறம் – 321)**
**கோங்கு முகைத்தன்னருவி முலை ஆகம் (அகம் 240)**

எனவும் புலவர் பாடுகின்றனர்.

## களப்பிரர் காசுகள்

கி.பி. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 6ஆம் நூற்றாண்டு வரை களப்பிரர் ஆண்ட காலத்தைத் தமிழக வரலாற்றின் இருண்டகாலம் என்பர் வரலாற்று ஆசிரியர். வரலாற்று ஆசிரியர்களின் கூற்றினை மறு ஆய்வுசெய்ய வேண்டிய நிலையில் இன்று நாம் உள்ளோம்.

ஏனெனில், களப்பிரர் ஆண்டதாகக் கருதப்படும் இருண்ட காலத்தில் தமிழகத்தில் ரோமாபுரியை ஆண்ட (கி.பி. 345-கி.பி. 600 வரை) 22க்கும் மேற்பட்ட ரோமாபுரி மன்னர்களின் செம்பு, வெண்கலக் காசுகள் (ஆயிரக்கணக்கில்) மக்கள் மத்தியில் செலாவணியில் இருந்திருக்கும் முகமாக, கருவூர் அமராவதி ஆற்றுப்படுகையில் இருந்தும், மதுரை வைகை ஆற்றுப் படுகையில் இருந்தும் மண்காசு எடுப்போரிடமிருந்து காசியல் ஆய்வாளர்கள் பலர் சேகரித்துள்ளனர்.

## ரோமானியரின் காசுகள்

தமிழ்நாடு தொல்லியல் துறையினர் அண்மைக்காலத்தில் நடத்திய அழகன்குள அகழ்வுகளில் ரோமானியர் காசுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ரோமானியப் பேரரசர் 2-ஆவது வாலான்டினியனின் (கி.பி. 378-கி.பி. 383) செம்புக்காசும், ஆக்கேடியஸ் (கி.பி. 383 - கி.பி. 408) காசும் கிடைத்துள்ளன. மேலும் பைசாந்திய மன்னன் முதலாம் ஜஸ்டினியனின் (கி.பி. 538-39) 40 நும்மியா வெண்கல, செம்புக்காசுகள் திண்டுக்கல் சீமையிலிருந்தும் கிடைத்துள்ளன.

முதலாம் கான்ஸ்டன்டைன், வாலன்டினியன், தியோடோரியஸ் ஹானோரியஸ், மார்சியன், ஜெரனோ, அனஸ், டானியஸ் முதலிய ரோமாபுரி மன்னர்களின் காசுகள் தமிழகத்தில், பவானி, மாமலல்லபுரம், பேரூர், புதுச்சேரி, திருக்கோவிலூர், ஆத்தூர், கருவூர், மதுரை நகரங்களில் காசியல் சேகரிப்பாளருக்குக் கிட்டியுள்ளமை எண்ணிப்பார்ப்பதற்குரியது. களப்பிரர் ஆட்சியின்போது, ரோமாபுரி நாட்டுக்கும் தமிழகத்திற்குமிடையே நிகழ்ந்த வாணிபத்திற்கு இக்காசுகள் சான்றுகளாக அமைகின்றன.

## இருண்ட காலத்தில் தமிழ் இலக்கியம்

நாட்டில் வலுவான ஆட்சியும் செல்வச் செழிப்பும் இருந்தால்தான் நல்ல இலக்கியங்கள் தோன்றும் என இலக்கிய ஆய்வாளர் கூறுவர். இக்கூற்றுக்கு அரண்செய்வதுபோலக் களப்பிரர் ஆட்சிக்காலத்தில் திருமூலரின் திருமந்திரமும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் சிலவும், முத்தொள்ளாயிரம், பெருங்கதை முதலிய அரிய இலக்கிய மலர்களும் தமிழில் முகிழ்த்துள்ளன.

## தமிழகத்தில் களப்பிரர் காசுகள் பற்றி ஆய்ந்தோர்

முதன்முதலில் ஆந்திர நாணயவியல் அறிஞர் எஸ். இராமைய்யா அவர்கள் இந்திய நாணயவியல் கழக இதழில் (35, 1973) களப்பிரரும் அவர்தம் நாணயங்களும் பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அவர்தம் கட்டுரையில் வெளியிட்டுள்ள நாணயங்களின் படங்களில் காணும் காசுகள் அனைத்தும் பிற்கால நாணயங்களே!

*பின்னர், தினமலர் ஆசிரியர் வெளியிட்ட களப்பிரர் காசில் காணும் எழுத்துப் பொறிப்பினை நாணயவியலார் ஏற்றுக் கொள்ளவில்லை.*

*(கொங்கு வரலாறு வி. இராமமூர்த்தி ப.353)*

**களப்பிரரின் ஓர் அரிய பொற்காசு**

*அண்மையில் இக்கட்டுரை ஆசிரியர் நான்கு காசுகளை, கரூர், அமராவதி ஆற்றின் படுகையிலும், மதுரை வைகை ஆற்றின் படுகையில் இருந்தும் சேகரித்துள்ளார். அவற்றில் மூன்று காசுகள் செம்பொன் காசுகள்; ஒன்று முகப்பில் யானை உருவம் பொறிக்கப்பெற்ற பொற் காசாகும். இப்பொற்காசுபற்றி எழுதுவதே இக்கட்டுரையாசிரியரின் நோக்கமாகும்.*

**காசுகள் பற்றிய குறிப்பு**

**காசு 1**



அகம் புறம்

உலோகம் : மாற்றுக்குறைந்த பொன்

வடிவம் : வட்டம்

நிறை (எடை) : 2 கிராம்

கிடைத்த இடம் : மதுரை வைகை ஆற்றுப் படுகை

முகப்பு : பாயும் நிலையில் இடப்பக்கம் யானை; யானையின் முன்கால்பக்கம் மீன் சின்னம்; யானையின் முதுகுப் பகுதி காசின் விளிம்பில் வில் அம்பு; காசின் மேல் இடது விளிம்பில் புலிச் சின்னம்.

புறம் : களப்பிரரின் அடையாள மலர் "கோங்க மலர்"

*மூவேந்தர்தம் சின்னங்கள் - குலமரபுச் சின்னங்கள் பொற்காசில் பொறிக்கப்பட்டிருப்பதாலும், களப்பிரர்தம் தம்குலமரபுச் சின்னம் யானை மற்றும் கோங்க மலர்ச்சின்னம் அடையாளம் என்பதாலும் இக்காசு களப்பிரர் காசாக இருக்க வேண்டும்.*

**காசியல் ஆய்வு :**

*தமிழக வேந்தர்கள் வெளியிட்டுள்ள காசுகளை ஆராய்ந்து பார்க்கும் போது, வெற்றிபெற்ற வேந்தன், தோற்ற வேந்தன் குலமரபுச் சின்னங்களை தான் வெற்றிபெற்றதற்கு அறிகுறியாக முகப்பில் தன் சின்னத்தோடு ஏனைய வேந்தரின் சின்னங்களைப் பொறித்தும் புறத்தில் தன்குலமரபுச் சின்னத்தை பொறித்தும் வெளியிடுவது பொது நியதியாக உள்ளது. இக்கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் சங்ககால மன்னர்கள் வெளியிட்ட சேர, சோழ, பாண்டியரின் செம்பொன் காசுகளில் வெற்றிபெற்ற வேந்தன் தன் காசில் ஏனைய வேந்தரின் இலச்சினைகளை உடன்பொறித்து வெளியிட்டமையைக் காணலாம்.*

*மேற்கூறிய கருத்தை மெய்ப்பிக்கும் வகையில் மூவேந்தர் சின்னம் உடன்பொறிக்கப்பெற்ற பல்லவ நந்திவர்மனின் காசிலும் பல்லவரின் காளைச் சின்னத்துடன் (முகப்பில்) புறத்தில் வில், கயல், புலிச் சின்னங்களை பொறித்திருக்கும் கவின்மிகு காட்சியைக் காணலாம்!*

*களப்பிரர் ஆட்சி தமிழக வரலாற்றில் இருண்டகாலமாக அமைந்துள்ளது என்பதை மறு ஆய்வு செய்ய வேண்டியவராக நாம் அமைகிறோம்.*

**(தொடர்ச்சி – 14ஆம் பக்கம் பார்க்க)**

# வீரராயப்பணம்

## ஒரு சின்னஞ்சிறிய பொற்காசு

- முனைவர் ச. இரவி

பெரியார் மாவட்டம், காங்கேயம் வட்டத்தில் பழைய கோட்டைப் பகுதியில் உள்ள சாலத்தோட்டம் என்ற இடத்தில் ராமசாமிக்கவுண்டர் மகன் சக்திவேல் என்பவர் வீடுகட்டுவதற்குப் வாணம் பறிக்கின்றபோது 2.5 அடி ஆழத்தில் கல்மூடப்பட்ட மண்செப்பில் இருபதுக்கும் மேற்பட்ட ஒரே மாதிரியான பொற்காசுகள் கிடைத்தன. அவற்றில் ஒன்று படத்தில் உள்ளது. இக்காசு வீரராயக்காசு என அறியப்பட்டது. இது போன்ற காசுகள் கொங்குநாட்டில் திருப்பூர், உடுமலைப்பேட்டை, காங்கேயம் முதலிய இடங்களில் கிடைத்திருக்கின்றன.

**எழுத்து**

இக்காசில் எழுத்துகள் எதுவும் பொறிக்கப்படவில்லை. எனவே எந்த அரசர்கள் வெளியிட்டார்கள் என்பதைக் கூறமுடியவில்லை.

**மதிப்பு**

'வீரராயர் பொற்காசு' என அழைக்கப்படும் இப்பொற்காசு 60% தங்கத்தால் ஆனது. இதன் மதிப்புத் தற்போது ரூ 40 இலிருந்து ரூ 60 வரை விலை போவதைக் காணமுடிகிறது.

**அளவு**

வட்ட வடிவில் காணப்படும் இப்பொற்காசு 8 மி.மீ. அளவுடையதாகக் காணப்படுகிறது. இதில் காணப்படும் குறியீடுகள் அனைத்தும் மிகத் தெளிவாகத் தெரிவது குறிப்பிடத்தக்கதாகும்.

**எடை**

இதன் எடை அளவு 370 மில்லிகிராம் ஆகும்.





### குறியீடுகள்

இக்காசின் இரண்டு பக்கங்களிலும் வளைந்த கோடுகளும் புள்ளிகளால் ஆகிய குறியீடுகளும் காணப்படுகின்றன. இக்குறியீடுகள் எதை உணர்த்துகின்றன என்பதைக் கண்டறிவது சற்றுக் கடினமாகவே உள்ளது.

### முகப்பு

இக்காசின் முகப்பில் வலதுபுறம் முதலையின் வாய் வடிவம் காணப்படுகிறது. திருவிதாங்கூர் பகுதிகளில் கிடைக்கக்கூடிய திருவிதாங்கூர் காசுகளில் இது போன்ற வடிவம் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. காசின் மையப் பகுதியில் மேலிருந்து கீழாகத் தொடர்ந்து வலது புறம் நோக்கிய அதன் முனை சற்று வளைந்த நிலையில் காணப்படும் குறியீடு மன்னர்களுடைய செண்டுபோல் அமைந்துள்ளது. இதனை ஒட்டிச் சற்றுக் கீழே படுக்கைவசமாக அமைந்திருக்கும் கோட்டின் இடதுபக்க முனை சிறிது வளைந்த நிலையில் ஒரு குறியீடு அமைந்திருக்கிறது. இக்குறியீடு மன்னர்களது தலைப்பாகைபோல் காணப்படுகிறது. அதன் கீழ் மூன்று வரிசைகளாக ஒவ்வொரு வரிசைக்கும் நான்கு புள்ளிகள் வீதம் மொத்தம் 12 புள்ளிகள் காணப்படுகின்றன. இப்புள்ளிகள் 12 இராசிகளைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

### புறம்

காசின் பின்பக்கத்தில் இடது புறம் சிறு வட்டம் அமைந்துள்ளது. இது சூரியனைக் குறிக்கிறது. வலது புறத்தில் சிறுபுடைப்பும் அதன்கீழ் இரண்டு புள்ளிகளும் ஒன்றன்கீழ் மற்றொன்றாகக் காணப்படுகின்றன. இப்புள்ளிகளை நட்சத்திரங்களாகக்கொள்வோமேயானால் அப்புடைப்பை நிலவாகக் கொள்ளமுடியும். ஆனால் வைணவக் குறியீடாக நோக்க அது சங்கைக் குறிக்குமோ என ஐயுற இடம் தருகின்றது.

இவைகளுக்கிடையே மேல்நோக்கிய இரு குறுகிய வளைகோடுகளும், கீழ்நோக்கிய இரு அகன்ற வளைகோடுகளும் கருடவாகனத்தைக் குறிக்கும் குறியீடாகக் காணப்படுகிறது. (அனந்தராயன் பணத்தில் காணப்படும் கொற்கையின் சிதைந்த வடிவத்தை நோக்க அது போன்ற வடிவமாக இதனைக் கொள்ளலாமா என்ற சிந்தனையும் எழுகின்றது.

அகன்ற வளைகோட்டின் உள்ளே முதலில் மூன்று புள்ளிகளும், அடுத்த வரிசையில் நான்கு புள்ளிகளும், அதன்கீழ் வலது ஓரத்தே ஒரு புள்ளியும் ஆகிய எட்டுப்புள்ளிகள் காணப்படுகின்றன. இப்புள்ளிகள் அனைத்தும் நாணயத்தின் மதிப்பைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

### வேறு பெயர்கள்

இக்காசைக் கொங்கு மக்கள் பல்வேறு பெயர்களிட்டு அழைக்கின்றார்கள்.

மிளகாய் விதை வடிவில் சிறியதாக இருப்பதால் மிளகாய் வத்தல் காசு என்றும், கொள்ளின் எடை அளவு இருப்பதால் கொள்ளுக்காசு என்றும், சடங்குகளில் பயன்படுத்துவதால் ‘காரியக்காசு’ என்றும், பின்பக்கத்தின் மேல்பகுதி நாமம் போன்று இருப்பதால் ‘நாமக்காசு’ என்றும் முன்பக்கத்தில் உள்ள 12 புள்ளிகள் 12 இராசிகளைக் குறிப்பதாகக் கொள்வதால் ராசிக்காசு

அல்லது ராசிப்பணம் என்றும், ஊட்டிவாழ் படகு மக்கள் இதுபோன்ற காசை "சின்னது ஹனா" என்றும் அழைக்கின்றனர். இதிலிருந்து இக்காசின் புழக்கத்தை நாம் அறிந்துகொள்ள முடியும்.

### பயன்பாடு

சாவின் விளிம்பு நிலையில் இருக்கின்ற வயது முதிர்ந்த பெரியவர்களது இறப்பை முடிவுக்குக் கொண்டுவர இக்காசை அவர்களது தொண்டைக்குள் போடுகின்ற வழக்கம் இப்பகுதியில் இருப்பதாக மக்கள் கூறுகிறார்கள். படகர் இனத்தில் திருமணச் சடங்குகளில் இக்காசு முன்பு பெரும் வழக்கில் இருந்ததாக அவ்வின மக்கள் கூறுகின்றனர்.

இதே போன்ற காசை (17-7-2001இல்) திருப்பூருக்கு அருகிலுள்ள நல்லூர்ச் சிவன் கோவிலில் சிவன் சிலையை அகற்றியபோது அவ்வூரில் உள்ள இராமசாமி என்பவர் எடுத்திருக்கிறார் (தகவல் : கௌமாரமடத்து சுவாமிகள்). இதனால் சிலைக்குக் கீழ் இக்காசைப் புதைத்து வைக்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்திருப்பதைக் காணமுடிகிறது.

இவற்றில் இருந்து கொங்குப் பகுதிகளில் வீரராயர் காசு பெரும் புழக்கத்திலும் பயன்பாட்டிலும் இருந்திருப்பதாக உணரலாம்.

### புள்ளிக்காசு

சங்ககாலத்துச் சேரர் காசுகளுக்குக் 'காணம்' என்று ஒரு பெயர் உண்டு. காணம் என்பது 'கொள்ளுக் காசு' எனப்பட்டது (மிகச்சிறிய காசு) பழைய கொள்ளுக்காசுகளில் புள்ளிகள் இருக்கும். பிற்காலச் சோழர்கள் காலத்தில் இப்புள்ளி வைத்த காசுகளைப் "புள்ளிக் குளிகைகள்" என அழைத்தனர். விஜயநகரத்துப் புள்ளிக்காசுகள் பின்னால் வந்தவையாகும். கொங்கு நாடு எங்கும் இப்புள்ளிக்காசுகள் கிடைக்கின்றன.

### பெயர்க்காரணம்

இப்பொற்காசை 'வீரராயர் காசு' என அழைப்பதின் காரணத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் ஓரளவிற்கு ஊகித்துக்கொள்ள வாய்ப்பு இருக்கிறது. வீரராயர் காசை எந்த மன்னன் வெளியிட்டான் என்பது பற்றிக் குறிப்பிட்டுக் கூறுவதற்கு இல்லை. கி.பி. 2-இல் தாராபுரத்தை முதன்முதலில் ஆண்டரெட்டி மன்னன் 'வீரராய சக்கரவர்த்தி' ஆவான். இவன் பெயரில் இக்காசுகள் வீரராயப் பணம் என அழைக்கப்பட்டு வருவதாகப் போளுவாம்பட்டி ஆசான் இராமசாமி அவர்கள் தமது கட்டுரையொன்றில் குறிப்பிட்டுள்ளார்.

விஜயநகரப் பேரரசர்களின் ஆதிக்கத்திற்கு உடப்ட்டு, கொங்குநாட்டுப் பகுதியில் ஆட்சிசெய்த குறுநிலத்தலைவர்கள் நாணயங்களைச் சொந்தமாக வெளியிட்டபோது, தமது பேரரசர்களைத் திருப்திப்படுத்துமுகமாக அவர்களது பொதுப் பெயரில் 'ராயர் காசு' என வெளியிட்டது இப்பெயருக்குக் காரணமாக இருக்கலாம். ராயர் என்று சொன்னால் 'அரசன்' என்பது பொருள். இப்பகுதியில் உள்ள சிற்றரசர்கள் வெளியிட்ட நாணயத்திற்கு அரசர்கள் வெளியிட்ட காசு என்று பொருள்பட 'ராயர் காசு' அல்லது வீரராயர் காசு என்றும் பெயர் பெற்றிருக்கலாம்.

**சமயக் குறியீடுகள்**

இவ்வகைக் காசுகள் வெளிப்படுத்தும் குறியீடுகள் மக்கள் பாரம்பரியப் பண்பாட்டையும், சமயத்தையும் வெளிப்படுத்தக் கூடியதாக இருக்கின்றன.

விஜயநகரப் பேரரசர்கள் வைணவ சமயத்தைச் சேர்ந்ததால் இவர்களுக்குக் கட்டுப்பட்ட சிற்றரசர்களும் அச்சமயத்தையே சார்ந்து நாணயங்களை வெளியிட்டுள்ளனர்.

17-ஆம் நூற்றாண்டுகளில் கருட, சங்குக் குறியீடுகள் வைணவத் தாக்கம் பெற்ற தங்கக் காசுகள் பல கொங்குப் பகுதிகளில் கிடைத்திருப்பது இதற்குத் தக்க சான்றாகும். 'வீரராயச பொற்காசுகளும் இத்தகைய சமயக் குறியீடுகளைக் கொண்ட நாணயங்களாகவும் இருக்கலாம்.

**கிடைக்கும் இடங்கள்**

வீரராயர் பொற்காசுக்ள் கொங்கு நாணயங்கள் என முடிவுகட்டப்பட்டாலும் இதுபோன்ற காசுகள் சற்று மாறுபட்ட நிலையில் தஞ்சை, திருவிதாங்கூர் பகுதிகளிலும் கிடைப்பதைக் கீழ்வரும் செய்திகள் உறுதிப்படுத்துகின்றன.

'தென்னிந்தியக்காசுகள்' என்ற நூலில், எல்லீஸ் வால்டர் என்பவர் "விஜயநகரப் பேரரசர்களிடமிருந்து சுதந்திரம் பெற்ற (சிறுசிறு சிற்றரசர்களில் தலைசிறந்தவர்களாகிய) சாமரின் மன்னர்களால் திருவிதாங்கூர் மற்றும் கேரளக் காசுகளாக வெளியிட்டதாகப் புச்சானர் என்ற வெளிநாட்டுப் பயணி குறிப்பிட்ட செய்தியைக் குறிப்பிடுகிறார்.

புச்சாணர் பாலக்காடு, சேராக்கால் வட்டம் மலபார்ப் பகுதிகளில் இவ்வகைக் காசுகள் இருந்ததாகப் பதிவு செய்கிறார்.

ஆறுமுகசீதாராமன் அவர்கள் 'ஆவணம்-9-இல் 'தென்னிந்தியக் காசுகள் - புதிய கண்டுபிடிப்பு' என்ற கட்டுரையில் 'இராஜகோபாலச் சக்கரப்பொன்' (பொற்காசு) என்ற பெயரில் ஒரு படத்தை வெளியிட்டுள்ளார். இப்படத்தின் பின்பக்கக் குறியீடும் இங்கு நாம் குறிப்பிடும் வீரராயர் பொற்காசின் பின்பக்கக் குறியீடும் ஒன்றாகக் காணப்படுகிறது. முன்பக்கக் குறியீட்டில் மட்டும் மாற்றம் காணப்படுகிறது. எனவே அவர் குறிப்பிடும் 'இராஜகோபால சக்கரப் பொற்காசு வீரராயப் பொற்காசின் ஒரு வடிவாகவே இருக்கலாம்.

**காசு வெளியிட்ட காலம்**

வீரராயர் பொற்காசுகள் விஜயநகரப் பேரரசுகள் வலிமைபெற்ற காலத்தில், இதற்குக் கட்டுப்பட்ட கொங்கு நாட்டுக் குறுநிலத்தலைவர்கள் நாணயங்களைத் தன்னிச்சையாக வெளியிட்டபோது வெளியிட்டதாகும். எனவே நமக்குக் கிடைத்திருக்கும் இப்பொற்காசு 17,18ஆம் நூற்றாண்டுகளில் ஏன், 19-ஆம் நூற்றாண்டுகளில் கூட அரசு செலாவணியிலும் மக்கள் புழக்கத்திலும் இருந்துள்ளதை அறியலாம். எனினும் இந்த கொங்கு வகை நாணயம் நீண்ட காலம் வழக்கில் தொடர்ந்து இருந்ததாகத் தெரியவில்லை.

# சங்ககாலப் பாண்டியர் வெளியிட்ட உருவங்கள் பொறிக்கப்பட்ட நாணயம்



- பேரா. க.ஆ. திருஞானசம்பந்தம்

**சங்ககாலப் பாண்டியர் பற்றிய குறிப்புரை**

சங்ககால இலக்கியங்கள் எனக் கூறப்படுபவை அனைத்தும் கி.மு. 5-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 3-ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலக்கட்டத்தைச் சேர்ந்தவைகளாகக் கருதப்படுகின்றன. பாண்டிய மரபினர் நீண்ட நெடுங்காலமாகவே தமிழகத்தை ஆண்டு வந்தனர் என்பதை கி.மு. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் இலக்கண நூலான தொல்காப்பியம் செப்புகிறது. கி.மு. 3-ஆம் நூற்றண்டைச் சேர்ந்த அசோகரின் 2-ஆம், 13-ஆம் பெரும்பாறைக் கல்வெட்டுகளில் பாண்டியர் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. இலங்கையின் அரசவழி நூலான மகாவம்சமும், மன்னன் விஜயன், பாண்டிய இளவரசியை மணந்தான் என்று சான்று சொல்கிறது. மேலும் கிரேக்கத் தூதனான மெகஸ்தனிஸ் பாண்டிய மரபு பற்றியும், நாடு முழுவதும் ஒரு பண்டியப் பெண்ணரசியால் ஆட்சி செய்யப்பட்டு வந்ததையும் தனது ‘இண்டிகா’வில் குறிப்பிடுகிறார்.

அழகன் குளம், வைகையாற்றின் வடகரையில் அதன் முகத்துவாரத்திற்கு அருகில் உள்ள ஒரு சிற்றூராகும். அவ்வூரில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் அகழ்வாய்வின் பயனாகக் கி.மு. 2-ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 2ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்த பல தொல்பொருள்கள் வெளிப்படுத்தப்பட்டன. சங்ககாலத்தில் கிழக்கு கடற்கரைப் பகுதியில், மிகச் சிறந்த துறைமுகப் பட்டினமாக இச்சிற்றூர் சிறந்திருந்தது என்பதை இவ்வகழ்வாய்வு நிறுவியது.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி உள்ளிட்ட இருபது பாண்டிய மன்னர்களைப் பற்றிய செய்திகள் புறத்திணைப் பாடல்களின் தொகுப்பான புறநானூற்றில் காணப்படுகின்றன. இப்புறநானூற்றுப் பாடல்கள் அனைத்தும் ஏறத்தாழ 150 புலவர்களால் பாடப்பட்டதாகும். கிருத்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே பாண்டிய மன்னர்கள், தமிழ் மொழிக்கும், இலக்கிய வளர்ச்சிக்கும் ஆதரவு அளித்தது போலவே, மேலை, கீழை நாடுகளுடனான தொழில் வர்த்தக உறவுகளையும் மேம்படச் செய்தார்கள்.

**காசுகள் பற்றிய இலக்கியச் சான்றுகள்**

சங்ககால இலக்கியங்களில், மக்களிடம் புழங்கிய பலவகை காசுகளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக,

பொன் (அகம் : 149) காசு (அகம் : 293) கட்டிப் பொன் (பெரும்பாணாற்றுப்படை வரி 158-166) பொலஞ்செய்காசு (அகம் : 363),

பளிங்குக் காசு (அகம் : 315), கானம் - பதிற்றுப்பத்து - ஆறாம் பத்தின்பதிகம் ஆகியவற்றைக் கூறலாம். ஐங்குறுநூறு (பாடல் 310)-இல் வட்டவடிவமுள்ள காசையே "பொலம்பெயர் பண்டிற்காசு" என்று குறிப்பிட்டுள்ளதாக அறிஞர்கள் கருதுகின்றனர்.

**பாண்டியன் 'பெருவழுதி' பெயரும்,**
**உருவங்களும் பொறித்த செப்புக் காசும்**

திருச்சிராப்பள்ளி மாவட்டம் கருவூருக்கருகில் அமராவதி ஆற்றுப் படுகையில் அரிப்புக்காரருக்குக் (மண்காசு எடுப்போர்) கிடைத்த ஒரு செப்புக் காசை இக்கட்டுரை ஆசிரியர் பெற்றார். இக்காசில் எழுத்துகளும் சில உருவங்களும் பொறிக்கப்பட்டிருந்தன. அவ்வெழுத்துக்கள் 'பிராமி' வரிவடிவில் (𑀧𑁂𑀭𑀼𑀯𑀵𑀼𑀢𑀺) 'பெருவழுதி' என்று அறியப்பட்டது. முன்னால் குறிப்பிடப்பட்ட 20 பாண்டிய மன்னர்களில், காலத்தால் முற்பட்டவனாகக் கருதப்படும் முதுகுடுமிப் பெருவழுதி அஸ்வமேத யாகம் செய்தவனாவான். இந்த யாகத்தில் கலந்துகொண்ட பிராமணர்களுக்குத் தட்சிணை (காணிக்கை) யாகத் தருவதற்காகச் சில சிறப்பு நாணயங்களை இம்மன்னன் வெளியிட்டான். இக்காசுகளின் ஒரு புறத்தில் யூபத்தம்பத்தில் (யாக ஸ்தம்பத்தில்) கட்டப்பட்ட குதிரையும் மறுபுறத்தில் பாண்டியர்களின் மரபுச் சின்னமான மீன் சின்னமும் பொறிக்கப்பட்டிருந்தன. சிலகாசுகளில் முற்குறிப்பிடப்பட்ட சின்னங்களுடன், பிராமி வரி வடிவத்தில் 'பெருவழுதி' என்ற பெயர் பொறிப்பும் காணப்படுகின்றன (இக்காசுகளைப் பற்றிச் சிறப்பான ஆய்வுரையை முதன்முதலாக வெளியிட்டவர் நாணயவியல் அறிஞர் திரு. இரா. கிருஷ்ணமூர்த்தியாவார். இம்முதல் ஆய்வுரை தமிழில், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் கருத்தரங்க மலரில் வெளியிடப்பட்டது. (தொகுதி 18; பாகம் 3; பக்கம் 306 - 311)

## காசு பற்றிய விவரம்

**முகப்பு**

செவ்வக வடிவமுள்ள செப்பு நாணயமான இதன் முகப்பில் நின்ற நிலையில் ஒரு மனித உருவம் உள்ளது. இது அரசனின் வடிவமாக இருக்கலாம். முகப்பின் கீழ்ப் பகுதியில் வலது புறத்திலிருந்து தொடங்கி கடிகாரச் சுற்றில் 'பெருவழுதி' என்ற பிராமி எழுத்துப் பொறிப்பு காணப்படுகிறது. இதன் இறுதி எழுத்தான 'தி' முகப்பின் இடப் புறத்தில் உள்ளது.

**புறம்**

புறத்தில் வழக்கமாக பாண்டியர் காசுகளில் காணப்படும் மீனிற்கு பதிலாக வலதுபுறம் பார்த்த நிலையில் நிற்கும் ஒரு சிங்கத்தின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. சிங்கம், சிவனின் மனைவியான கொற்றவை (துர்கா)யை அடையாளப்படுத்துவதாகும். அதுபோலவே மீன் சின்னம், கடலையும் நீண்ட கடற்கரையையும் (உடைய பாண்டிய நாட்டை) அடையாளப் படுத்துவதாக உள்ளது. பாண்டிய மன்னன் பெருவழுதி தன்னை எதிர்த்த பலநாட்டு மன்னர்களையும் வெற்றிகொண்டு





அவ்வெற்றிகளின் அடையாளமாக அஸ்வமேத யாகம் செய்தான். அந்த யாகத்திற்காகவே இந்த மாதிரியான சிங்கம் பொறித்த காசுகளை அவன் வெளியிட்டிருக்க வேண்டும்.



| | | |
|---|---|---|
| உலோகம் | : | செம்பு |
| வடிவம் | : | செவ்வகம் |
| அளவு | : | 2.75 செ.மீ. X 2 செ.மீ X 0.18 செ.மீ. |
| எடை | : | 5.310 கிராம் |
| முகப்பு பொறிப்பு | : | நிற்கும் மனித உருவமும், 'பெருவழுதி' பிராமி எழுத்து பொறிப்பும் |
| புறம் பொறிப்பு | : | வலப்புறம் திரும்பி நிற்கும் சிங்கம் |
| காலம் | : | கி.மு. இரண்டு அல்லது கி.மு. முதலாம் நூற்றாண்டு. |
| கிடைத்த இடம் | : | கரூருக்கு அருகில் அமராவதி ஆற்றுப் படுகை. |

களப்பிரரின் அரிய பொற்காசு 7–ஆம் பக்கத் தொடர்ச்சி

ஏனெனில் ரோமாபுரியை ஆண்ட பிற்கால ரோமாபுரி மன்னர்களில் 22 மன்னர்களின் காசுகள் தமிழ்நாட்டில் கிடைப்பதாலும், அரிய தமிழ் இலக்கிய மலர்கள் தமிழகத்தில் கிடைத்திருப்பதாலும் களப்பிரரின் அரிய பொற்காசுகளும், கிடைத்திருப்பதாலும் களப்பிரர் ஆட்சி தமிழக வரலாற்றில் ஒரு பொற்காலமாகும்.

**பார்வை நூல்கள்**

1. சங்க இலக்கியத்தில் மலர்கள் : இல. தாணம்மாள்
2. சைனரின் தமிழிலக்கண நன்கொடை : க.ப. அறவாணன்
3. களப்பிரர் : நடனகாசிநாதன்
4. தமிழர் காசுஇயல் : நடன காசிநாதன்
5. பாண்டிய நாட்டில் களப்பிரர்கள் : மு. அருணாசலம்
6. தமிழ்நாடு அரசு வெளியீடு
தமிழ்நாட்டு வரலாறு : பல்லவர் பாண்டியர் காலம் – களப்பிரர் வரலாறு : டாக்டர் அ. கிருஷ்ணசாமி
7. கொங்கு வரலாறு : வீ. இராமமூர்த்தி
8. களப்பிரர் : எஸ்.டி. நெல்லைநெடுமாறன்
9. இந்திய நாணயவியல் கழகம் இதழ் தொகுதி – 35–1973
"களப்பிரரும் அவர்தம் நாணயங்களும் : எஸ். ராமய்யா



# கருவூர் வஞ்சியும், பழஞ்சேரர் ஓலைமுத்திரையும்

(Personal seal of Early Cheras and their Capital Karuvur Vanji)

- ஆசான். புலவர் ஐ. இராமசாமி

## சேரமன்னர்

மூவேந்தரில் குடபுல வேந்தராகிய சேரர் மூத்த குடியினர். இவர் சேரன், சேரலன், உதியன், குட்டுவன், இரும்பொறை, கோதை எனும் பட்டங்களை உடையவர். இவர்தம் வரலாறு கூறும் நூல் பதிற்றுப்பத்து; மேலும் அகம், புறம். ஐங்குறுநூறு, சிலப்பதிகாரம், தகடுர் யாத்திரை முதலிய பழைய நூல்களிலும் காணலாம். நிகண்டுகளில் சேரர் பொதுப் பெயர்கள் பல உண்டு. அவற்றுள், கொங்கன், கொல்லிச் சிலம்பன், பொருநைத் துறைவன், மலையன், மலையமான் என்பன இவர்தம் கொங்கு நாட்டுத் தொடர்பினை உணர்த்துவது.

## சேரர் தலைநகர்

இவர் தலைநகரம் வஞ்சியாகும். 'கருவூர் வஞ்சி' என்ற நிகண்டு (திவாகரம்-பிங்கலந்தை) மொழியைக் காண்க. கருவூரே வஞ்சிமாநகர் என்பது; இந்நகரம், ஆண் பொருநை எனும் அமராவதி ஆற்றின் கரையில் உள்ளது. இதற்குப் பல இலக்கியச் சான்றுகள் உள்ளன. நிலநூல் ஆய்வாளர், "தாலமி" (PTULEMY) என்பவர் வஞ்சிக் கருவூர், உள்நாட்டில் இருந்ததென்பர். புகழியூர் மலைப் பிராமிக் கல்வெட்டுகளில், பழஞ்சேரர் பெயர்களும், கருவூர்ப் பொன் வாணிகன் பெயரும் உள்ளன. பிற்காலம் வரை எழுந்த கல்வெட்டுக்களிலும் வஞ்சி இடம் பெறுகின்றது.

## தொல்லியல் சான்றுகள்

கருவூர் அமராவதியில், கடந்த சில ஆண்டுகளில் உலகில் எங்கும் காணாதவாறு ஏராளமான சேரர் பழங்காசுகளும் (வில், அம்பு, யானை பொறிப்பு உடையவை) முத்திரையிட்ட வெள்ளி, செப்புக் காசுகளும், இவற்றை உருவாக்குகின்ற அச்சுக்கரு(Matrix)வும், ரோமானியர் பழங்காசுகளும், அவற்றின் அச்சுக்கருவும், கிரேக்கர், பொனீசியர் பழங்காசுகளும், கொல்லிப்புறை, கொல்லிரும்புறை, மாக்கோதை, குட்டுவன் கோதை ஆகிய பழஞ்சேரமன்னர்தம் பிராமி எழுத்துக் காசுகளும், சங்க கால மக்கள் உருவங்களும் பிராமி எழுத்துக்கள் பொருந்திய மோதிரங்களும் பிறவும் கருவூர் அமராவதி ஆற்றில் கிடைக்கப்பெற்று அவ்வப்போது நாளிதழ்களிலும் கட்டுரைகளிலும் செய்திகள் வெளிப்போந்தன.

கருவூரேயல்லாமல், மேல் கொங்குநாட்டில் பேரூர் முட்டம், வெள்ளனூர், சூலூர்ப் பகுதிகளில் கூட இத்தகு தொன்மைச் சாதனங்களும் பிறவும் கிடைத்துள்ளன. எகிப்தியர், கிரேக்கர், பாபிலோனியர், ரோமானியர் முதலிய மேல்நாட்டு வணிக மக்கள் இப்பக்கம் வாணிகம் மேற்கொண்டதற்கு உரிய தடயங்களும் அகப்பட்டுள்ளன. எனவே கருவூர் சேரர்தலைநகராகப் பண்டுதொட்டு இருந்துவந்ததென்றும், பண்டைக் காலத்தில் இது மிகப் பெரிய வணிக நகரம் என்பதையும் அறிகின்றோம். சேரரின் செப்புக் காசுகள் மட்டும், கருவூரில் 250க்கும் மேற்பட்ட வகையில் பல வடிவங்களில் பற்பல சின்னங்களுடன் கிடைத்துள்ளன.

பழங்காலப் பேரரசுகளின் தலைநகரங்கள் இருந்த இடம், இன்று தொல்லியல் சான்றுகளுடன் விளங்க வேண்டுமல்லவா? சேரர் தலைநகர், வஞ்சி கருவூரா, அல்லது திருவஞ்சைக் களமா என்ற ஆராய்ச்சி வெகுநாளாக நடந்து வந்தது (செந்தமிழ் 15, 16 தொகுதிகள் காண்க) திரு. ரா. இராகவ அய்யங்கார் எழுதிய, வஞ்சிமாநகர் எனும் நூல், தலைநகர் கருவூரே (கொங்கு) என்பதற்குத் தக்க சான்றாக உள்ளது. இன்றைய ஆய்வாளர்கள் பலர் கருவூரின் தொல்லியலைத் தழுவி இதுவே 'சேரன் வஞ்சி'யாகுமென்று துணிந்து கூறி வருகின்றனர். மேலும் ஒரு நல்ல சான்றினைக் காண்போம்.

**ஓலைமுத்திரை**



இந்த ஓலை முத்திரை (பனை ஓலையில் வைக்கப்படும் முத்திரை) கருவூரில் கிடைத்ததாகும். இதன் எடை 14 கிராம். சுற்றளவு 2.5 செ.மீ. விட்டம் 9 மி.மீ. நீளம் 4.6 செ.மீ. முற்றிலும் வெண்கலத்தால் மூடப்பெற்றது. பனை ஓலையில் வைத்து அழுத்தினால், ஒரு யானையும், யானையின் காலடியில் ஒரு மீனும் எதிரே மிகவும் சிறிய ஒரு புலியும் காணப்படும். இவற்றை வரலாற்றுக் கண்கொண்டு நுட்பமாகப் பார்த்து அறிய வேண்டும். இதன் மேல் பகுதியிலுள்ள, காம்பு சற்று உடைந்துள்ளது. இதன் வழிப் பார்த்தால் உள்ளே திடமான ஒரு உருக்கு ஆணி, முடிவு வரை சென்று, சுமார் 3 மி.மீ. அளவுள்ள ஒரு இடத்தில் மேற்கண்ட மூன்று உருவங்களையும் தோற்றுவிப்பதைக் காணலாம்.

**அக்கால அரசு ஆவணங்கள்**

மிகவும் தொல்பழங்காலத்தில் ஓடுகளில் எழுதி வந்தனர். தமிழ்ப் பிராமி, அசோகர் பிராமி எழுத்துக்கள் கீறிய ஓடுகளை நான் பேரூரில் கண்டறிந்தேன். எழுதும் எழுத்தாணிகளும் கிடைத்தன. வேறு வேறு வகையான எழுத்துக்கள் கலந்து வருவதில் அவற்றை எவரும் படித்து அறிய இயலவில்லை. சங்ககாலத்தில் ஓலையில்தான் எழுதிவந்தனர். இதற்கு எழுத்தாணி வேறு. அரசு ஆவணங்கள் அனைத்தும் ஓலையில்தான் எழுதப் பெற்றன. ஓலையிலும் அரச முத்திரை வைப்பதும் உண்டு.

அரசன் ஆணைகளை எழுதுபவன் திருவாய்க்கேள்வி என்பதும் அதைச் செயல்படுத்துபவன் திருமந்திர ஓலை நாயகனாவான் என்பதும் சோழர்கால வரலாறு. ஒரு பழமையான காலத்திலிருந்து இப்பழக்கம் வந்திருக்க வேண்டும் அல்லவா? ஓலையின் அகலம், ஒன்று அல்லது ஒன்றரை அங்குலம் இருக்கும். இதில் அரச முத்திரை வைக்க வேண்டுமானால் அந்த முத்திரை மிகவும் சிறியதாகவே இருந்திருக்க வேண்டும். அத்தகு ஓலை முத்திரையைக் காண்போம். (படம் - 1)

**முத்திரையின் அமைப்பும், தெய்வ உருவங்களும்**

இதன் கீழ்ப்பகுதி நான்கு பக்கங்களை உடையது. (தனித்தனியே பக்கங்கள் படம் எடுக்கப்பட்டு ஒன்று சேர்க்கப்பட்டுள்ளது) மூன்று பக்கங்களில் அம்மன் உருவம் உண்டு. இவை போர்க் கோலம் பூண்டுள்ளன. கைகளில் வில் உண்டு. ஒன்று அமர்ந்த நிலை, மற்ற இரண்டும் நின்ற நிலையில் உள்ளன.

நான்காவது உருவம், சிறிய தலை, குறுகிய கைகள் கீழே மீன் வடிவ உடம்பு, மனித உருவமும் மீன் வடிவமும் கலந்தது. கீழ்ப்பகுதி இடதுபுறமாக வளைந்துள்ளது. இதனைக் கடற்கன்னி அல்லது மீன்வடிவமான மச்சம்

(*Fish god*) எனலாம். சேரர் ஆட்சியும், ஆதிக்கமும் கடல்வரை இருந்தன என்பதைக் காட்டும் மேல் தெய்வமாக இருக்கக் கூடும். மேலே கண்ட தெய்வங்கள் சேரர்குல தெய்வமாகிய கொற்றி (கொற்றவை) ஆகலாம். சேரமன்னர், தமது குல தெய்வத்தை வணங்கி, "இது தெய்வத்தின் ஆணை" என்ற வகையில் பயபக்தியுடன் ஆணை-களைப் பிறப்பித்தனர் என்று கருதலாம். தமக்குச் சொந்தமான முத்திரையில் தம் குலதெய்வமான கொற்றவையை வைத்துக் கொண்டிருப்பது சேரரின் அழுத்தமான தெய்வபக்தியைக் காட்டுகின்றது. வெற்றி தருபவர் கொற்றி எனும் கொற்றவை. வெற்றிகள் பற்றியும் தெய்வ உருவங்களை இதில் அடக்கியிருக்கலாம். வழிபடத் தகுந்த அளவில் இந்த முத்திரையில் இவை காணப்படுகின்றன எனலாம்.



போளுவாம்பட்டி முட்டத்தின் அகழ்வு ஆய்வின் போது முனைவர் ஆர். பூங்குன்றன் (கோவை - தமிழகத் தொல்லியல் - அலுவலர்) அவர்கள், 'சேரன் கொற்றி' என்று பொறிந்துள்ள பிராமி எழுத்து ஓட்டினைக் கண்டறிந்தார். பட்டினப்பாலை எனும் நூலில் முத்திரை பேசப்படும். அது பொதி மூட்டைகளின் மேல் வைக்கும் புலி முத்திரையாம். இது அரசு ஆணை ஓலையில் வைத்தற்குரியது. இந்தச் சிறிய முத்திரை அரசர் கையிலோ, அல்லது அரசர் அலுவலகத்திலோ வைத்துக்கொள்ளத் தக்கதாகும்.

**இதன் அரிய தன்மையும் வேலைப்பாடும்**

இது பார்வைக்கு அழகானது, நுட்பமான வேலைப்பாடு உடையது. வட்டமான வளையங்களை அமுக்கினாற்போல் உள்ளது. சிறிய இடத்தில் கொற்றவைகள் அழகாகப் பதிக்கப்பட்டுள்ளன. இதனை இவ்வாறு நன்கு ஆராய்ந்து செய்த சிற்பி பாராட்டற்குரியவர். சேரர் வரலாற்றில் மிகுதியும் இடம் பெறத் தக்க இந்த முத்திரை புதிய கண்டுபிடிப்பு. சேர நாட்டின் பழங்கலைகளுக்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

புலி, வில், மீன் இவை மூன்றும் இருப்பது; இதில் புலி, யானை, மீன் மூன்றும் உள்ளன. வில்லுக்குப் பதில் யானை இடம் பெறுகிறது. மலைநாடு வேழம் உடைந்து அல்லாமல் சேரமன்னர் யானைகளையும் மிக்குடையார் என்பது, பல்யானை செல்கெழுகுட்டுவன் என்ற சேரன் பெயரால் விளங்கு-கின்றது. இதில் யானை பெரிது மற்றவை சிறியனவாம். மூவேந்தர் சின்னங்களும் ஒன்றாக உள்ள வரலாற்றுத் தடயங்களும், பழங்காசுகளும் கிடைத்துள்ளன. சேரமன்னரின் பொற்காலத்தை இந்த முத்திரை காட்டுகின்றது எனலாம்.

முற்றிலும் மண் ஏறிய இது, இன்னது என்று எனக்குத் தந்த நண்பருக்கோ, அதை வாங்கிய எனக்கோ தெரியாது. சுத்தம் செய்து

ஆராய்ந்து பார்த்த பின்பே இது இன்னதென்று ஊகித்து அறியப்பெற்றது. இதன் வரலாறு இவ்வாறுதான் இருக்க வேண்டும். இது குப்பையில் கிடந்து அழியப் பார்த்தது. நாம் அதைக் காப்பாற்றினோம். சில ஆண்டுகளுக்கு முன்பு, கிடைக்கப்பெற்ற இதன் வரலாறு மிகவும் சுருக்கமாக இந்தியக் காசு இயல் கழகத்தின் ஆண்டறிக்கையில் வெளியிடப்பட்டது (J.N.S.I. U.P. LUI 1994) இது கருவூர்ச் சேர மன்னர்க்குச் சொந்தமானது.

கிடைத்தற்கரிய இதனால், கருவூரே சேரர் தலைநகரம். இதுவே வஞ்சிமாநகர் என்பது தெரிய வருகின்றது. ஒலையில் முத்திரை எவ்வாறு காணப்படுகிறது என்பதைக் கண்டறிதல் நம் கடமையாகும்.

# தீண்டாமைக் கொடுமைக்கு ஒரு சான்றாவணம்

**- செந்தீ நடராசன்**

குமரி மாவட்டம், அகஸ்தீஸ்வரம் வட்டம் பறக்கை என்னும் ஊருக்கு வெளிப்புறமாகவுள்ள அக்கரை மகா தேவர் ஆலயத்தருகே கண்டெடுக்கப் பட்ட குறுக்குக்கால் கல்வெட்டு இது.

**1) இது கங்**

**2) அ க த்து**

**3) கீ ள சா**

**4) தி ரு வா**

**5) ப டா து**





(இது 'ஒன்றா'ங் அகத்து கீள் சாதிக்கு வரப்படாது)

**கிடைத்த இடம் :**

பறக்கை மதுசூதனப் பெருமாள் கோயில் (16-ஆம் நூற்றாண்டு) கல்வெட்டுகளில் இருந்து, இக்கல்வெட்டு கிடைத்துள்ள பகுதி வலிகொல்லிக் கிழார் மங்கலம் என அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது. கலி ஆய்வில் இன்று குடியிருப்புகள் இல்லாமல் வயலைநோக்கி இருக்கும் அக்கரை மகாதேவர் ஆலயத்தைச் சுற்றிலும் பிராமணர்கள் குடியிருப்பு இருந்தது தெரியவருகிறது.

"இது ஒன்றா'ங் அகத்து" இதன் பொருள் இது (வர்ணாசிரம அடுக்கில்) முதல் வர்ணமான (பார்ப்பன ) அகரம் இது"

பிறதாழ்த்தப்பட்ட, சாதியினர் இவர்களின் அகரத்தின் உள்ளே வரக்கூடாது என்பதை சமூக வழக்குமரபாகக் கடைப்பிடிக்கப்பட்டதோடு குறுக்குக்கல் வைத்துக் 'கடுமையாகக்' கடைபிடிக்கப்பட்டதையே இக்கல்வெட்டு சான்று நமக்குத் தெரிவிக்கிறது.

இதன் காலம் சுமார் 250 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கலாம்.

# சோழமாதேவி கைலாயமுடையார் கோயில் கல்வெட்டுகள்



- கி. ஸ்ரீதரன்

சோழமாதேவி கைலாயமுடையார் திருக்கோயில் கல்வெட்டுகள் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையால் 1990-ஆம் ஆண்டு படியெடுக்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து மத்திய அரசின் தொல்லியல் துறையும் இக்கோயில் கல்வெட்டுக்களைப் படியெடுத்துள்ளது. (இக்கோயில் பற்றிய கட்டுரை பழங்காசு 2, 3-வது இதழ்களில் வெளிவந்துள்ளது)

இக்கோயில் அர்த்தமண்டபத் தெற்குச் சுவரில் காணப்படும் வீரராஜேந்திரன் கல்வெட்டினைப் படித்து அதில் குறிப்பிடப்படும் ஆதிசங்கரர் பற்றியும், அவரது பாஷ்யம் பற்றிய செய்தியினையும் முதலில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் முன்னாள் இயக்குநர் முனைவர். இரா. நாகசாமி அவர்கள் தினமணி, இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழ்களில் (நாள் 18.5.1991) கட்டுரையாக எழுதினார். இவ்வரலாற்றுக் குறிப்பினைக் கல்வெட்டு அறிஞர் திரு. ஆர். திருமலை இ.ஆ.ப. (ஓய்வு) அவர்கள் தனது **Studies in South Indian epigraphy and History** (தொல்லியல் துறை வெளியிடு 1994) என்னும் நூலிலும் குறிப்பிட்டுள்ளார். அதனால் இக்கோயிலின் கல்வெட்டுகளின் வரலாற்றுச் சிறப்பினை அனைவராலும் உணர முடிந்தது.

இக்கோயில் காணப்படும் கல்வெட்டுகளில் காலத்தால் முந்தையது முதலாம் இராஜராஜசோழனின் 8-ஆவது ஆட்சி ஆண்டை சேர்ந்ததாகும். 15-ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டில் ஊர் சபை ஊரின் மைய இடமான "பிரம்மஸ்தானம் இராஜராஜன்" என்ற இடத்தில் கூடியதாகக் குறிப்பு வருவதால் 'சோழமாதேவிச் சதுர்வேதிமங்கலம்' என்ற இவ்வூரும், இக்கோயிலும் முதலாம் இராஜராஜசோழன் காலத்தில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை அறிய முடிகிறது. இக்கோயில் பண்டைக்காலத்தில் கோயில் நிர்மாணிக்கப்பட உதவும் அளவுகோலான "கிஷ்க்கு முழம்" எனப்படும் அளவின் உட்பிரிவான மதுரைமுழம் எனப்படும் "அதம கிஷ்க்குமுழம்" என்ற அளவு முறை படியும், சிற்ப நூலான மயமதம் கூறும் அமைப்புப்படியும் அமைந்துள்ளது என்பதை தொல்லியல்துறை ஸ்தபதி திரு. வே. இராமன் தனது ஆய்வுக் கட்டுரையில் (ஆவணம் - இதழ் 2) குறிப்பிட்டுள்ளார்.

இக்கோயிலின் கருவறை அர்த்தமண்டபத் தெற்குச் சுவரில் தேவக்கோட்டத்தில் பிட்சாடணர் வடிவம் காணப்படுகிறது. முதலாம் பராந்தக சோழன் காலத்திலிருந்தே பிட்சாடணர் வடிவத்தை கருவறைத் தேவக்கோட்டத்தில் அமைக்கத் துவங்கியிருப்பதை உய்யகொண்டான் திருமலை திருவாமாத்தூர், காமரசவல்லி, திருப்பால்துறை முதலிய கோயில்களில் காணலாம். உத்தமசோழன் காலத்திலும் கோனேரிராஜபுரம், ஆடுதுறை, செம்பியன் மாதேவி, கருந்தட்டாங்குடி, திருவாரூர் முதலிய கோயில்களிலும் பிட்சாடணர் வடிவத்தை காணமுடிகிறது. கருந்தட்டாங்குடி

வசிஷ்டேசுவரர் கோயிலில் காணப்படும் பிட்சாடணர் - ரிஷிபத்தினி சிற்பம் சோழமாதேவி கோயிலில் காணப்படும் சிற்பத்தினைப் போன்றே காணப்படுவது குறிப்பிடத்தக்கது. பிற்காலச்சோழர் காலத்திலும் திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர், மரக்காணம், உலகாபுரம் முதலிய கோயில்களிலும் பிட்சாடணர் வடிவம் தேவக்கோட்டத்தில் அமைக்கும் வழக்கம் தொடர்ந்து வந்துள்ளதை காணமுடிகிறது.

இக்கோயில் கருவறை மேற்குச்சுவர் தேவகோட்டத்தில் திருமால் சிற்பம் காணப்படுகிறது. சிற்பத்திற்குத் தலைக்கு மேலே இருபகுதிகளில் கவரி எனப்படும் சாமரங்கள் காணப்படுகின்றன. முதலாம் இராஜராஜசோழன் காலத்திய கோயில்களான தஞ்சைப் பெரிய கோயில், திருவையாறு வடகைலாயம், சிவபுரம் முதலிய கோயில்களில் தேவக்கோட்டத்தில் தெய்வ திருஉருவங்களுக்கு மேல் சாமரங்களை அமைக்கும் வழக்கம் தொடர்ந்துள்ளதைக் காணமுடிகிறது.

இராஜராஜசோழனின் மனைவியான சோழமாதேவி என்பவர் தஞ்சை பெரிய கோயிலுக்குப் பல செப்புத் திருமேனிகளைத் தானமாக அளித்துள்ளார். அக்கோயில் கல்வெட்டிலும் சோழமாதேவி சதுர்வேதி மங்கலம் என்ற இவ்வூர் முக்கிய இடம் பெற்று விளங்குகிறது. எனவே இக்கோயில் முதலாம் இராஜராஜசோழன் காலத்தில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை உறுதியாகக் கூறமுடிகிறது.

இக்கோயிலின் பழுது பார்க்கும் பணியில் பங்கு கொண்ட தொல்லியல் துறை உதவிச்செயற்பொறியாளர் திரு. நா. கிருஷ்ணமூர்த்தி, இக்கோயிலின் சிறப்பை அனைவரும் அறிந்து கொள்ள இந்து நாளிதழில் நிழற்படங்-களுடன் கட்டுரைகள் எழுதிய செய்தியாளர் திரு.வி. கணபதி, இக்கோயில் கல்வெட்டுக்களை திருத்தமாக எழுதி உதவிய தொல்லியல்துறை இளநிலை கல்வெட்டாய்வாளர் திரு. இரா. ஜெயராமன் ஆகியோருக்கும், கைலாயமுடையார் கோயில் புணரமைப்பில் ஆர்வம் கொண்டு ஒத்துழைத்த சோழமாதேவி ஊர் மக்கள் அனைவருக்கும் நன்றி .

| | | | |
|---|---|---|---|
| க. எண். | : 1. | இடம் | : கருவறை வடக்குச்சுவர் |
| மன்னன் | : இராசேந்திர சோழன் – I | ஆட்சியாண்டு | : 3 (கி.பி. 1015) |

செய்தி : சித்திரை மாதம் திருவாதிரை 7 நாட்கள் திருவிழா நடைபெற்ற செய்தி; பெருங்குறிச்சபை கூட்டம் திருச்சுற்றுக்கல்லூரியில் நடைபெற்ற செய்தி; ஆகியன குறிப்பிடப்படுகின்றன.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொப்பரகெஸரி [illegible][1] ஸ்ரீ ராஜெ
2. ந்த்ர சோழ தெவர்க்கு யாண்டு ரூ[2] ஆவது தென்
3. கரை பாண்டி குலாசநி வளநாட்டு [illegible] [[illegible]][3]
4. யம் சோழமாதெவிச் சருப்பெதி மங்கல(த்)
5. து பெருங்குறி ஸபையொம்[4] இவாட்டை இ...
6. நாயற்று வெள்ளிக்கிழமை பெற்ற அவிட்டத்தி
7. நாளது பகல் ஸ்ரீ கயிலாஸத்து தெவர்........த்

1. பன்மரான 2. ரூ–3 3. பிரஹ்மதேயம் 4. சபையோம்

8. திருச்சுற்றுக் கல்லூரியிலே தளம் செய்விச்சு கூடி இரு
9. ந்து பணிச்ச எழுத்து ஸ்ரீ கயிலாஸமுடைய பரமெசு
10. ரற்க்கு சந்திராதித்தவர்[5] சித்திரைத் திருவாதிரை
11. முன் எழுநாள் திருவிழா பொந்து திருவாதிரைத் தீர்த்
12. தமாடப் பெறுவராக பணிச்சு நிவந்தம் செய்(து)
13. குடுத்த பரிசாவது ந(ம்)மூர் தென்பிடாகை அடைக்கால
14. ம் முறைத்தொன்றாள் நிலமும் பத்துச் செய்
15. உள்ப்பட விளைஞ்சு குடிபற்றத்தெ கிடந்த தனி நி
16. லங்களுகு நிக்கி நின்ற நிலமெலாம் நிலவசமா
17. ஆட்டை விட்டம் பதின்சுங்கழுஞ்ச பொன் அடை
18. க் குணமாக இத்தெவர் கர்மிகளெ தண்டியும் அடு
19. த்தும் இப்பொன் கொண்டு சந்திராதித்தவற் எழு
20. நாளும் திருவிழா பொந்து சித்திரைத் திருவாதிரைத்
21. தீத்தமாடப் பெறுவராக பணிக்க ஸபாநியொ
22. கம்[6] குடுத்தொம் பெருங்குறி ஸபையொம்[7] கண்
23. டியர் பகவதி மதிசூதனார் பணியால் இவூர்
24. மத்யஸ்தனன்[8] திருவரங்க நாராயணன் திரு வெ
25. லான் ப்ரஹ்மப்ரியனென்[9] இவை எனெழுத்து.

* * *

க.எண். : 2 | இடம் : கருவறை வடக்குச்சுவர்

மன்னன் : இராஜராஜன் – I | ஆட்சியாண்டு : 8 (கி.பி. 993)

செய்தி : இவ்வூர் மத்யஸ்தன் நந்தவனம் அமைத்து அதன் பராமரிப்புக்காக நிலங்கள் நந்தவனப்புறமாக அளித்த செய்தி; சுப்ரமணியவதி, திருநாராயண வாய்க்காலின் கண்ணாறு ஆகியன குறிப்பிடப்படுகின்றன.

1. ஸ்வஸ்திஸ்ரீ கொவிராஜ ராஜ ராஜகெஸரி பன்மர்க்கு[10] யாண்டு அ ஆவது
2. தென்கரை ப்ரஹ்மதெயம்[11] ஸ்ரீசொழ மஹாதெவிச்[12] சதுர்வெதி மங்கலத்து மத்ய
3. ஸ்தன்[13] ஏறன் கூத்தாடியான மஹாஜந ப்ரியனென்[14] இவ்வூர் ஸ்ரீ கயிலாஸத்து
4. பரமெஸ்வரர்க்கு[15] நான் சமைப்பித்த இத்தெவர்[16] திருநந்தவநமாவது[17] இஸ்ரீ
5. கோயில் மெலைத் திருச்சற்றாலைக்கு மெற்கும் வைஜ்யர்[18] மனைக்கும் உவச்ச
6. ர் மனைக்கும் காவிதிகள் மனைக்கும் வடக்கும் திருவானைக்காவல் ஒற்றி
7. ஊரன் கூத்தப் பிராநார் மனைக்கு கிழக்கு ஸபையார்[19] பொதுமனைக் கோலால்
8. கால்கோல் நிலம் நீக்கி இதற்குக் கிழக்கும் மதிளுக்கு தெற்கும் ஆக இந்ந
9. டுவுபட் நிலமித்தனையும் உள்நில மொழிவின்றி மல்லிகை
10. யும் இருவாச்சியும் சிறுசெண்பகமு மற்றும் பல்பூ மரங்கள் எப்
11. பேர்ப்பட்ட பூமரமும் வைத்து நீர்க் குறைவு களைக் குறைவும் வெலி

5) சந்திராதித்தவர்–சந்திரர் சூரியர் உள்ளளவும். 6) சபாநியோகம். 7) சபையோம் 8) மத்யஸ்தனன் 9) பிரஹ்மபிரியனேன் 10) பன்ம(ர்)க்கு 11) பிரஹ்மதேயம் 12) ஸ்ரீசோழமகாதேவிச் சதுர்வேதி மங்கலம் 13) மத்தயஸ்தன் 14) மஹாஜனபிரியனேன் 15) ஸ்ரீகயிலாஸத்து பரமேசுவரர்க்கு 16) இ(த்)தேவர் 17) திருநந்தவனமாவது 18) வைத்தியர் (வைஞ்ஜயர்) 19) சபையார்

12. க்குறைவும் மற்றுமெப்பேர்ப்பட்ட குறைவும் படாமே சந்திராதி
13. த்தவல்[20] இத்திருநந்தவானஞ்[21] சமைப்பாருக்கு நிவந்தமா[22] நான் குடுத்த
14. நிலமாவது இ(வ்)வூர் வடபிடாகை சுப்ரமண்ய[23] வதிக்கு கிழக்கு திருநா
15. ராயண வாய்க்காலுக்கு வடக்கு உஆங்கண்ணுற்று ரு[24] ஆம் சதிரத்துக் கிழக்க
16. டைய ஸ்ரீ நாராயணச் செரிச் சிற நாராயணன் ஆதித்ய பிடார சோமயா
17. யாஜியார்[25] உள்ளிட்ட அஷ்டகத்தார்க்கும்[26] பட்ட ருமாவில்[27] வடக்கடை முக்கா
18. வே[28] க்கிழ்வு[29]வில் வடமெற்கடைய ரு[30] நிக்கி நாந் ஸ்ரீமத்ய[31]
19. ங்கலாதித்தநான ஆதித்தந் திருவரங்க நாராயணன்...
20. விலைகொண்டு உடைய நிலம் சுப[32] கீழ் உ.. ரு[33] வரை மாவும் கா
21. ணிக் கீழ் ஒரு மாச் செய்யும் இத்திருநந்தவானத்துக்கு அநுரா
22. திதவல்[34] நந்தவானப் புறமாக நிபந்தஞ்[35] செய்து குடுத்
23. தொஞ் ஸ்ரீ கைலாஸத்து பரமேஸ்வரர்க்கு[36] மத்யஸ்தன்[37] ஏறன் கூ
24. த்ததாடியான மஹாஜநப் ப்ரிய[38]னென் இது வந்மகேஸ்வர ரக்ஷை[39]

* * *

க. எண் : 3 இடம் : கருவறை வடக்குச்சுவர்

மன்னன் : இராஜராஜன் – I ஆட்சியாண்டு : 15 (கி.பி. 999)

செய்தி : ஊரின் மைய இடமான பிரம்மஸ்தானம் இராஜராஜன் என்ற மண்டபத்தில் கூடி ஊர்ச் சபையினர் முடிவெடுத்தனர். இவ்வூரிலிருந்த வீரசோழ விண்ணகர் பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய திருமேனிகளுக்கு வழிபாடு செய்ததைப் பற்றிய செய்தி; ஊர் மைய இடம் பிரம்மஸ்தானம் இராஜராஜனின் பெயரில் இருப்பதால் இச்சதுர்வேதிமங்கலம் அவன்காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போலப் பெருநிலச் செல்வியும் தன(க்)
2. கெ யுரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர் சா
3. லை கலமறுத்தருளி வேங்கை நாடும் கங்கபாடியும் நு
4. ளம்ப பாடியும் தடிகைபாடியும் குடமலைநாடும் தண்டா
5. ற்கொண்டு தன்னெழில் வளர் உழியுளெலா யாண்டும் தொழுத
6. கைய விளங்கும் யாண்டே செழி இறை தேசுகொள் ராஜரா
7. ஜகெசரி வந்மற்கு[40] யாண்டு யரு[41] ஆவது தென்கரை ப்ரஹ்மதேயம்[42] ஸ்ரீ சொழம
8. ஹாதேவி சதுர்வேதி மங்கலத்து பெருங்குறி ஸபையொம்[43] இவாட்டை மீ
9. ன நாயிறு சனிக்கிழமை பெற்ற இரேவதி நான்று பகல் நம் நடுவில் ப்ர
10. ஹ்ம ஸ்தாநம்[44] இராஜராஜ நிலையதன்மி[45] செய்து கூடி இருந்து பணிப்பணியால் ப
11. ணித்து இவ்வூர் வைகாநஸர்க்கு பணித்து ஸ்ரீ முகங் குடுத்த[46] பரிசாவது
12. இவ்வூர் இவ(ர்)கள் தாங்கள் அவ்வூர்[47] கடவ செவ(ர்)களை கூர்ப்பித்து அர்ப்ப[48]

---

20) சந்திராதித்தவல் 21) இத்திருநந்தவனம் 22) நிவந்தமா(க) 23) சுப்ரமண்யவதிக்கு
24) ரு–3 25) ஆதித்யபிடாரசோமயாஜியார் 26) அஷ்டகத்தார்க்கும் 27) 3மாவில்
28) முக்காவே காணி முந்திரிகை (3/4 + 1/80 + 1/320) 29) மாவில் 1/20 30) 3மா 31) ஸ்ரீமத்யஸ்தன்ம
32) 4 மாவின்கீழ் 33) இருமாவரைமாவும் (2x1/20+1/40) 34) சந்திராதித்தவல் 35) நிபந்தஞ்செய்து
36) ஸ்ரீகைலாஸத்து பரமேஸ்வரர்க்கு 37) மத்யஸ்தன் 38) மஹாஜனப்பிரியனென்
39) வந்மகேஸ்வரரக்ஷை 40) பன்மற்கு 41) யரு – 15 42) பிரஹ்மதேயம் 43) சபையோம்
44) பிரம்மஸ்தானம் 45) நிலே தன்மி 46) ஸ்ரீமுகங்குடுத்த 47) அவ்வூர் 48) கூர்ப்பித்து அர்ப்ப

13. ந்துல் வந்த பங்கு 24 (உயசு) இவ்விரு பத்துநாலு பங்கும்
14. .... உண்டு வாயறை செய்து பங்கால் பூவிற் கால பொன்னாக ஓராட்டை நா
15. கடவ பொன் 12ம் இப்பொன் பன்னிரு கடிஞ்சு பொன்
16. னுஞ் செகுத்து இந்ருவிய ஸ்ரீ வீரசோழ விண்ணகர் பெருமாநடிகள்
17. நம்பிராட்டியார் ஸ்ரீ தேவிப் பிராட்டியார்க்கும் பூமிதேவிப் பிராட்டியார்க்கும்.
18. சந்திராதித்தவற் திருவமிது செய்விக்க கடவரான பரிசாவது இவகன்கட
19. பன்னிரு கடிஞ்சு பொன்னாலும் கலமாக இப்பன்னிரு
20. கழஞ்சு பொன்னாலும் வந்த நெல்லு ஆடகரா உயள இந்நூற்றிரு பதின்க
21. ல நெல்லும் நிச்ச ணி கழுக்குறுணி அறுநாழி நெல் சார்த்தி பெ
22. நாழி ஒன்றிபட்டிமார்க்கு திருவமிர்தும் நின்றி இருநாழி நெல்
23. ............. மடைக்காயமிர்தும் கொண்டு
24. ................ யு மிரது செய்விக்க கடவராகவும் இப்பாத இம்மூன்ற ல
25. .................. மமிர்து செய்வியாராகில் வவிகாலங்களில்
26. ..................... ஒற்று ஊர் வாரியம் பெருகேளளய் தங்வ கொள்
27. .................. இப்படி செய்விப்பொமாராகவும் இப்படிக்கு

* * *

க.எண் : 4 இடம் : கருவறை வடக்குச்சுவர்

மன்னன் : இராஜராஜன் – I ஆட்சியாண்டு : 26 (கி.பி. 1011)

குறிப்பு : ஊரின் வடக்கிலிருந்த இராஜராஜன் என்ற பெயருடைய தண்ணீர்ப்பந்தலில் கூடி எடுத்த முடிவு குறிப்பிடப்படுகிறது. 'பஞ்சமகாசப்தம்' வழிபாட்டு இசை பற்றிய குறிப்பும் காணப்படுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போல பெருநிலச் செல்
2. வியும் தனக்கே உரிமை பூண்டமை மனக்கொள
3. காந்தளூர் சாலை கலமருத்தருளி வேங்கை
4. நாடும் கங்கபாடியும் நுளம்பபாடியுந் தடிகை
5. பாடியுங் குடமலை நாடுங் கொல்லமும் கலிங்
6. கமும் எண்டிசை புகழ்தர ஈழமண்டலமும் இரட்டபாடி
7. ஏழரை இலக்கமும் திண்டிறல் வெண்றித் தண்டாற் கொ
8. ண்டு தன்னெழில் வளரூழியு ளெல்லா யாண்டுந் தொழு
9. தக விளங்கும் யாண்டே செழியரை தேசுகொள் ஸ்ரீ
10. கொராஜராஜ ராஜகெஸரி வந்மரான ஸ்ரீ ராஜராஜ தெவர்க்கு யா
11. ண்டு இருபத்தாறாவது தென்கரைப் பாண்டி குலாசநி
12. வளநாட்டு பிரம்மதேயம் ஸ்ரீ சோழமஹாசெவிச் சது (ர்)
13. வேதி மங்கலத்துப் பெருங்குறி ஸபையோம்
14. இவ்வாட்டை மீநனாயற்று நாயற்றுக் கிழமை பெற்ற
15. மகத்தி நான்று பகல் நம்மூர் வடக்கில் தண்ணீர் பந்த
16. ல் ஸ்ரீ ராஜராஜ நிலேய[illegible][49] செய்வித்துக் கூட்டக் குறைவ
17. றக் கூடி இருந்து பணிப்பணியால் பணித்து [illegible][50]
18. செய்து உவச்சன் இரண்டாயிரவன் மல்லநுக்குந்தி

49) இராஜராஜநிலே தந்மி 50) வியவஸ்தை

19. ருவரங்க நாராயணன் அப்பிக்கு நிவந்தஞ் செய்து குடுத்
20. த பரிசாவது நம்மூர் நடுவில் ஸ்ரீ கோயில் ஸ்ரீ வீர சோ
21. ழ விண்ணகர் தெவர்க்க உகூமஹா ஶ ஶுத்துக்கும்[51] ஸ்ரீ நமி
22. வாஸமுடையார்க்கு உகூமஹா ஶ ஶுத்துக்கும்[52] உவச்சப் புறமாக
23. உய்யக் கொண்டானக்கு தெற்கு தென்பிடாகை புதுபட்
24. டி ஒரு மாச்செய்யால் உடன் பாரத தெய் பூவில் குறுணிெ
25. நல்லும் பிடாகை புதுப்பட்டி ஒரு மாச் செய்யால் உடன்
26. மாததெ பூவில் ஏழுநாழி நெல்லும் அட்டுவோமாக
27. வும் இந்நெல்லுக்கொண்டும் நடுவில் ஸ்ரீகொயிலுக்கு
28. கந்டிகை ஒன்றும் மத்தளம் இரண்டும் சங்கு இரண்டும் காள
29. ம் நாலு ஆகஒந்பதும் ஸ்ரீகயிலாசத்துக்கானநெல்

***

க. எண் : 5 பகுதி I, II இடம் : கருவறை மேற்குச்சுவர்

மன்னன் : இராஜராஜன்–I ஆட்சியாண்டு : 13 (கி.பி. 998)

செய்தி : சோழமாதேவி சபையினர் பிரம்மஸ்தானம் ராஜராஜனில் கூடி உவச்சுப்பணி செய்ய நான்கு சகோதரர்களை நியமித்த செய்தியை குறிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் போல பெருநிலச் செல்வியுந் தனக்கே
உரிமை பூண்டமை மனக் கொளக் காந்தளூர்
2. சாலை கலமறுத்தருளி வெங்கை நாடும் கெங்கபாடியுந்
நுளம்பபாடியும் தடிகைபாடியும் குடமலைநாடும் கொ
3. ல்லமும் கலிங்கமும் யெண்டிசை புகழ்தர இருநெதி(ய)மும் திண்டிறல்
வென்றி தண்டாற்கொண்ட தன்னெழில் வளர்ஊழி(யு)
4. ள்ளெல்லா யாண்டும் தொழுதகை விளங்கு யாண்டே செழியரைத்
தேசுகொள் ஸ்ரீ கொராஜராஜகேசரி பன்மராண ஸ்ரீராஜராஜர்க்கு
5. யாண்டு யகூ[53] ஆவது தென்கரை பாண்டி குலாசனி வளநாட்டு
ஶஹ்ஜஷயம்[54] ஸ்ரீ சோழமாதேவி சதுர்வேதி மங்கலத்து பெருங்குறி ஸ
6. ஸையொம்[55] இவ்வாட்டை ஞனுநாயற்று[55a] செவ்வாக்கிழமை பெற்ற
பரணி நான்று இரா நம் நடுவில் ஶஹ்ஜஷஸ்தானம்[56] இராஜராஜனிலெ
7. யதிசெய்து[57] பெருங்குறி ஸஸையொம்[58] கூடி இருந்து இவ்வூர் மாநசெனமா
தேவன் பாழிக்கும் இவ்வூர் உவச்சன் இரண்டாயிரவன் கணத்தாருன (சோ)
8. ழமாதேவி பேருவச்சனுக்கும் இவன்தம்பி இரண்டாபிரவன் கடம்பனான
கந்துருவ பேருவச்சனுக்க இவன் தம்பி இரண்டாயிரவன் (பல்லவராயனு)
9. க்கு இவன்தம்பி இரண்டாயிரவன் திருவரங்க தேவனுக்கும் இவ்வனைவர்க்கும்
பணிபணியால் பணித்து சந்திராதித்தவற் இறையிலியாக
10. இவ்வூர் ஸ்ரீ கயிலாஸத்து உரஷெஷரக்கு[59] உவச்சு இவ்வனை வருமாய்
நாலாள் கொட்ட கடவார்களாக இந்நாலாளுக்கும் ஸஸையாரும்[60] சந்திராதி

---

51) பஞ்சமஹாசப்தத்துக்கும் 52) பஞ்சமஹாசப்தத்துக்கும் 53) யகூ–13 54) பிரஹ்மதேயம்
55) சபையோம் 55a) தனுஞாயிற்று 56) பிரஹ்மஸ்தானம் 57) தந்மி 58) சபையோம்
59) ஸ்ரீ கயிலாஸத்து பரமேஸ்வர(ர்)க்கு 60) சபையோரும்

11. த்தவல் இறை இறுக்க கடவொமாக இந்நாலாளுக்கும் உவச்சு காணியார் செய்து குடுத்த நிலமாவது இவ்வூர் வடபிடாகை ஸுப்ரஹ்மண்ய[61] வதிக்கு (கிழக்கு)

12. நாராயண வாய்க்காலுக்கு வடக்கு முதற் கண்ணுற்று நாலாஞ் சதிரத்து மெக்கடைய அம்பலப்புறம் உள்ளிட்ட அஷ்டகத்து[62] பட்ட

13. கடைய ஒருமாவரை[63] ஒருமாவரையும் பிராந்தகவதிக்கு கிழக்க திருநாராயண வாய்க்காலுக்கு வடக்கு முதற்கண் ணுற்று நாலாஞ் சதிரத்து...

14. . . . ௩மா[64]வில் மேக்கடைய ஸபையொமுடைய[65] பொதுநிலம் ௩மா[66] மாவறுதிக்கு கிழக்கு இவ்வாய்க்காய்க்கேய் வட(க்கு) இரண்டாங்கண் (ணு)

15. ற்றுசஆஞ் சதிரத்து கிழக்கடைந்த ௩மாவில்[67] தெற்குடைய ஸபையொமுடைய பொதுநிலம் முக்காணியு இ................ க்கு இவ்வாக்(கா)

16. லுக்கெ வடக்கு இவ்விரண்டாங் கண்ணுற்று அஞ்சாஞ் சதிரஞ்மெக்கடைய முக்காணியில் தெற்கடைய ஸபை (யோமுடைய) பொது நிலம்

17. ஆகநிலம் நான்மா(வ)ரையிலு மாதொன் பாழி இரண்டும் பணியால் கொண்டனுபவித்து இரண்டாள் கொட்ட கடவாராக நின்ற... (இர)

18. ண்டு மாக்காணிசெய் அனுபவித்து இரண்டாள்கொட்டட கடவாராக இ(நா)லாள் நாலுங் கொட்டாது முட்டில் முட்டின ஆனால் உழக்கெண்ணை.

19. ர்க்கு அட்ட கடவராகவும் இப்பரிசு பணித்து சிலாலெகை செய்து குடுத்தோம் பெருங்குறி ஸபையோம் திருநாராயண வாய்க்கால்

20. பிரம்பில் நாரசிங்க கண் திருமாலிருஞ்சோலை பணியால் பன்மாஹெஸ்வரர் ரக்ஷை[68]

* * *

க. எண் : 6 பகுதி I & II இடம் : கருவறை மேற்குச் சுவர்

மன்னன் : இராஜராஜன்–I ஆட்சியாண்டு : 8 (கி.பி. 993)

செய்தி : வீரசோழ இளங்கோவரையர் தேவி ஆதித்தபடாரி என்பவர் தானமளித்த செய்தி

1. ஸ்வஸ்திஸ்ரீ கொவி ராஜராஜகெசரி பன்மர்க்கு[69] யாண்டு அஆவது உடையார் வீரசோழ இளங்

2. கொவரையர் தேவியார்[70] பராந்தகன் ஆதித்த படாரியார் தென்கரை ப்ரஹ்மதேயம்[71] ஸ்ரீ சொ

3. ழ மஹாதேவி[72] சதுர்வேதி மங்கலத்து... ட்டத்தான் ஸபையார்க்கு தர்ம்மதானமாக[73]

4. மூன்று குறிய . . . . . . . . . ளையும் வழுவாத்து இவ்வூரார் கல்யா

5. . . . . . . . . . கழஞ்சரையும் குடுத்த பரிசாவது

6. பலிசைப் பொன் . . . . . . . . . றும் மஞ்சாடியு(ம்) நாலு மாவுங் கொண்டு ஆ

7. ட்டாண்டு தோறும் . . . . . . . . . விட்டத்தினாங் இஸ்ரீ கயிலாயத்தே இ

8. த்தானத்து . . . . . . . . . ஸ்ரீ கயிலாயமுடையார் முகப்பெய்கு மெய்க்காட்டு

9. மெய்க்காட்டி . . . . . . . . . பொன் கழஞ்சு நீக்கி நின்றதொக்கக் கொள்ளக் கடவா

61) சுப்ரமண்யவதிக்கும் 62) அஷ்டகத்து 63) ஒருமாவரை 64) 3மாவில் 65) சபையோமுடைய 66) 3மா 67) 3–மாவில் 68) மாகேஸ்வரர்ரகைஷ 69) பன்மர்க்கு 70) தேவியார் 71) பிரஹ்மதேயம் 72) மஹாதேவி 73) சபையார்க்கு தர்ம்மதானமாக

10. ராகவும் இருப்பெரு மெய்காட்டு மெய்க்காட்டி..................
அவ்வாட்டை பலிசை பெறாதாராகவும் இப்
11. பரிசு சந்திராதித்தவற் செய்யக்கடவாராக ...............
ஒஜீதிஜ டி த்தான்[76] ஸஹையார்க்கு இப்பொன் கு
12. டுத்தென் பராந்தகன் ஆதித்த படாரியென் இயதுத்திஜ[77] ரக்ஷிப்பான்
காலிந்பொடி என்றலை மெலந

⁂⁂⁂

க.எண் : 7 இடம் : கருவறை தெற்குச்சுவர்
மன்னன் : இராஜராஜன்–I ஆட்சியாண்டு : 13 (கி.பி. 998)
செய்தி : சோழமாதேவி சதுர்வேதி மங்கல சபையார் பேரம்பலம் இராஜராஜனில் கூடி எடுத்த முடிவு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ காந்தளூர் சாலை கலம்
2. றுத்து கொராஜராஜ கெஸரி பஜற்கு[78] யாண்டு
3. யரு[79]ஆவது தென்கரை ஜுவஜுஷயம்[80] ஸ்ரீ சோ
4. ழ உஹாஈஜேவி[81] சதுர்வேதி மங்கலத்து பெரு
5. ங் குறி ஹையொம் இவ்வாட்டை சிங்க நாயறு
6. புதன்கிழமை பெற்ற ஆயிலெத்தி னான்று பகல்ந
7. (ம்) பரம்பலம் ராஜராஜன்னிலெய் யகீ[82] செய்வித்து பெரு
8. ங்குறி ஸஹையொம் கூடி இருந்து இவ்வூர் ஸ்ரீ கயிலாஸத்து
9. உஉா ஸட்டாரகிக்கு[83] ஒரு ஸந்தி திருஅமுது செய்ய நிசதம் நானாழி ஆகவும் கறி அமுது பொதுஒன்றும் நெய்ய
10. முது நிசதம் ஒரு பிடியும் தயிரமுது நிசதம் உரியும் அ
11. டைக்காய் அமுது போது இரண்டும் ஆக இப்பரிசு...
12. சந்திராதித்தவற் இ ஸ்ரீ கொயிலுடைய ஸதான பதிகள் (உ)
13. ஊபட்டாரகியை[84] இப்பரிசு திருவமுது செய்விக்க கடவார்க(ளாக நி)
14. த்த நிவந்தமாவது இஸ்ரீ கொயிலுடையார்கள் இத்தேவரை அஜீ த்து[85] உண்ண உடைய பங்கு ஏழு இப்பங்கு ஏழும் ஒட்டி (க்குரு)
15. த்த இறை எப்பேர்ப்பட்டதும் இூ உஹா ஸஹையொமெய்[86]
16. இறை இறுத்துக் குடுப்பதாகவும் இப்பங்கு ஏழினாலும்
17. வந்த இறை தூ்த்துக்கு[87] ஆக இப்பரிசு இவ்வுமா பட்டார
18. கியை நித்தமும் திருவமுது செய்விக்கக் கடவராகளாகப் பணி
19. பணியால் பணித்து இவ்வூர் ஸ்ரீ உாயவச்செரி[88] புன்களத்து
20. லக்கிரீவன் மாலரி கேசுவன் பணியால் இப்பரிசு (சந்திரா)
21. தித்தவற் செய்யக் கடவார்களாக . . . . . . . . . .
22. . . . . . இப்பெருங்குறி ஸபை . . . . . . . . . . .
23. படி இப்பரிசு இப்பங்கு ஏழும் . . . . . . . . . . .
24. இவ்வுமா பட்டாரகியை நிசதம் . . . . . . . . . .
25. (வற்) திருவமுது செய்விக்கக் (கடவோமாகவும் ஸஹையோம்)

---

76) ப்பேதிபட்டத்தான் 77) இ(த்)த(ர்)ம்மத்தினை 78) பன்மற்கு 79) யரு–13 80) பிரஹ்மதேயம் 81) சோழமஹாதேவி 82) தம்மி 83) உமாபட்டாரகிக்கு 84) உமாபட்டாரகிக்கு 85) அர்ச்சித்து 86) இம்மஹாசபையோமெய் 87) த்ரவ்யத்துக்கு 88) ஸ்ரீமாதவச்சேரி

க.எண் : 8 இடம் : கருவறை தெற்குச் சுவர்
மன்னன் : இராசேந்திர சோழன் I ஆட்சியாண்டு : 2 (கி.பி. 1014)
செய்தி : சந்தி விளக்கெரிக்க கொடுத்த தானம் பற்றிய செய்தி.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கொப்பரகேசரி [illegible] ஸ்ரீ ராஜெந்திர சோழ
2. தேவர்க்கு யாண்டு 2 ஆவது தெங்கரைய் பாண்டிகு
3. லாசநி வளநாட்டு [illegible][89] ஸ்ரீ சோழ
4. ருப்பேதி மங்கலத்து திருவிராமசெரி திருக்கண்
5. ....... சந் சாத்தந் னீல கண்ட ஸங்...
6. இவூர் ஸ்ரீ கயிலாஸத்து பரமெசுவரக்கு
7. ........ வைத்த ஸந்தி விளக்கு எரிக்கவை
8. ........ சந்திராதித்தவல் எரிப்போமாநோம்
9. ஸ்ரீ கொயில் உடையோம் இவைய் . . . . . . .

* * *

க.எண் : 9 இடம் : அர்த்தமண்டபம் தெற்குச்சுவர்
மன்னன் : வீரராஜேந்திரன் ஆட்சியாண்டு : கி.பி. 1063–70
செய்தி : ஆதிசங்கரரின் பகவத் பாதீயம் சாரீரக பாஷ்யம் விரிவுரை செய்ய தானம் அளித்த செய்தி

[illegible]
[illegible] — *

1. ஸ்வஸ்திஸ்ரீ வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும் செங்கோல்
2. கருங்கலி கடிந்து கூடல் சங்கமத்து ஆகவமல்லளை அஞ்சுவித்து
3. ...... புறங்கண்டு மற்றவன் மாதெவியரொடு [illegible][90] கை.
4. ...... குறித்த களத்து ஆபிவமல்லனை அஞ்சுவித்து வேங்கை
5. ....... விரதமுடித்து விஜையா[illegible]ஷேகம்[91] பண்ணி [illegible][92]
6. ........ ளொடும் வீற்றிருந்தருளிந கோராஜ கேசரி [illegible] உடையார் ஸ்ரீ வீரராஜெ
7. .......... பாண்டி குலாசநி வளநாட்டு [illegible]யம்[93] ஸ்ரீ சோழ [illegible]
8. [illegible]வி[94] சருப்பெதி (மங்கலத்து) பெருங்குறி ஸ[illegible]யோம் திருமாதிருநல் சாலை ஆ
9. ழ்வார் திருமுற்றத் . . . . . ஞ்செய்து கூட்டக் குறைவறக் கூடியிருந்து ப
10. ணிப் பணியால் பணித்து [illegible]யம் [illegible]/த்துக்கு[95] [illegible]ந

---

* ராஜேந்த்ரம் வீரராஜேந்த்ர₃ ஸபாரோ தச்ச பாவின₃ ।
ப்ரச்ரிதப்ராப்ததர்மக்ஞை₃ (ப்ர)மோதம் ரக்ஷயதாமிதி ॥

இதன் பொருள் : "அரசர்களுள் அரசனான வீரராஜேந்திரன் விஜயாபிஷேகம் செய்துகொண்டு ராஜ்யம் ஆளுகின்ற காலத்து அந்த பாவனையில் இந்த தர்மமானது செய்யப்பட்டது. இத்தானத்தைப்பெற்ற அறநெறியாளர்களால் இது மிக்க மகிழ்ச்சியோடு பாதுகாக்கப்படட்டும்"

*பொருள் விளக்கம் :* **திரு. A. வீரராகவன்** *அவர்கள், சமஸ்கிருத பண்டிதர், சரஸ்வதி மஹால் நூலகம், தஞ்சாவூர்.*

---

89) பிரஹ்மதேயம் 90) வஸ்துபரிகனமும் 91) விஜையாபிஷேகம் 92) வீரசிம்ஹா 93) பிரஹ்மதேயம் 94) ஸ்ரீசோழமாதேவி 95) பகவத்பாதீயம் சாரீரக பாஷ்யத்துக்கு

11. ந்ந படாரர்[96] பண்ணிந ப்ரதீபகம்[97] ஆகிற வார்த்தீகம் வக்கணிப்பார்க்

12. கு வ்ருத்தி[98] ஆக விட்ட நிலம்[99] ஆவது இவ்வூர் வடபிடாகை திருவரங்கவதிக்கு மெ

13. மற்க்கு வீரசோழப் பெருவாய்க்காலுக்கு வடக்கு 6[100]ஆங் கண்ணுற்று (நீர் பா)

14. ஞ்ச நீர் நிலம்[101] இங்கே எ[102]–ஆங் கண்ணுற்று ரு[103] ஆம் சதிரத்துக் கிழக்

15. கடைந்த 3 மாவில்[104] வடக்கடைய்த அரைக்காணி[105] நீக்கி ருடம் காலேகாணி[106] இங்கே அ[107]
ஆம் கண்

16. ணுற்று ரு[108] ஆஞ் சதிரத்து மேற்கடைந்த மும்மாவில்[109] தெற்கடைய நிலம்முக்காணி[110]

17. ழி வதிக்கு மேற்கு வீரசோழப் பெருவ . . . . . . .

18. சதிரத்துக் கிழக்கடைந்த . . . . . . .

19. ற்கடைந்த நிலம் 3மா[110a] வும் இங்கே . . . . . .

* * *

க.எண் : 10

இடம் : பகுதி I, II அர்த்தமண்டபம் கருவறை வடக்குப்பட்டி
பகுதி III அர்த்தமண்டபம் கருவறை வடக்கு குமுதம்

மன்னன் : இராசேந்திரன் – I

ஆண்டு : கி.பி. 1012 – 1044.

செய்தி : நிலதானம் கொடுத்த செய்தி.

பகுதி 1 :

1) ஸ்வஸ்தி ஸ்ரீ திருமன்னி வளர இருநிலமடந்தையும் பொச்செயப் பாவையும்
சீர்த்தநிற் செல்வியும் தனக்கெ . . . . . . . . . . ழி வுள்ள . . . . . . . ள்ளிச் சூழ் மதிட்
கொள்ளிப் பாக்கையும் நண்ணற் கருமுரண் மன்னைக் கடக்கமும்
பொருகடல்லீழத் தரைசர்தம் முடியும் ஆங்கவர் தெவியரொங்கெழில் முடியும்
முன்னவர் . . . . . . வைத்த சுந்தரமுடியும் இந்திர நாரமும் தெ . . . . . .
தொல்பெருங் காலைப் பல்பழந் தீவும் செருவிற் சினவில் . . தொ . . . களைகட்ட

2. பரசுராமர் மெல்வருஞ் சாந்திமற் றிவரண் கருதி இருத்திய செம்பொற் றிருத்தகு
முடியும் பயங்கொடு பழிமிக . . . . . . சயசிங்கன் அளப் . . . . . . மும் நவன் நெறிக்
குலப்பெரு மலைகளும் விக்கிரம வீரச் சக்கரக் கொட்டமும் முதிர்பட வல்ல மதிர
மண்டலமும் காமிடங் . . . . . . . . . . மாசுணி தெசமும் . . . . . குவையும் சிட்டரும்
செறிமிளை ஒட்ட விஷையமும் பூசுர செய்நற் கொசலை நாடும் . . . . . . பாலனை வெம்

3. முனையழித்து வண்டுறை சொலைத் தண்டருச்சியும் இரணசூரனை
முரண்ணுதற் தாக்கி திக் வெஞ்சமவர் விளாகத் தஞ்சுவித்தருளி ஒண்டிறல்
யானையும் பெண்டிர் பண்டாரமும் நித்தி . . . . . . . த்திரலாடமும் வெறிமலர்த்
தீர்த்த தெறிபுனற் கங்கையு மலைகடல் நடுவுளப் பல கலஞ் செலுத்தி
சங்கிராம . . . . . . . . . த்த வனகநகர் போர்த் தொழில் வாசல்லில் விச்சாதிர
தொரணமும் மொய்த்தொளி பு(ண்ம)ணிப் புதவமு

---

96) சிதாநந்தபடாரர் 97) பிரதீபகம் 98) வ்ருத்தி 99) நிலம் 100) 6ஆம் 101) நிலம் 102) எ – 7
103) ரு – 5 104) 3 மாவில் 105) அரைக்காணி 106) காலேகாணி 107) அ – 8 108) ரு – 5
109) மும்மாவில் 110) நிலம்முக்காணி 110a) நிலம் 3மாவும்

பகுதி : 2

4) ................ (சிதைந்துள்ளது)

5. ர்த்யதைந்[111] ராஜராஜன் . . . . . . . . குறைவறக் கூட்டியிருந்து[112] பணிப்பணியால்ப் பணித்து ஸபாவ்யவஸ்தை[113] செய்து கல்வெட்டக் க . . . . . ங்க் காணிப்பார்க்கு வைத்த . . . . குத . . . .

6. டைய ஸ்தபூமியில்[114] மெற்க்கடைதெ நிலம் மாகாணி அரைக்காணிக் கீழ் முக்காலும் இம்மூன்று மாவால் வடக்கடை ந்தஅறுகாணி[115] யில் மெற்கடைய . . . . . . . .
த்து கிழக்கடை 3மாவில்[116] வடக்கடைய நிலம் இங்கெ.

7. கிழக்கடை 3மாவி[117] ல் தெற்கடைய கால்காணிக்கி[118] இதநொடும அடைந்த[119] நிலம் அரைமா முந்திரிகை யும் சந்திரசெகரவதிக்கு கிழக்கு . . . . சதிரத்து மெற்கடைதெ நிலம் மூன்று மாவும்

பகுதி – 3 :

8. அரையெ மாகாணி அரைக்காணிக்கீழ் முக்காணி . . . . . . . . னைப்புறமாக கொண்டு வைத்த நிலம் இங் கெய் மூன்ருஞ் சதுரத்து கிழக்கடைதெ நிலமாவால் தெற்கடைதெ மாகாணி முந்திரிகையில் கிழக்கடைந்த நிலம் முக்காணி அரைக்காணி முந்திரிகையும் . . . . . வும் ஆக அ – த்து தடி . . . டு வைத்த நிலம் அரையெ . . . மாகாணி முந்தி . . . . . ராகக் கடவாராகவும் இப்பரிசு ஸபாவ்யவஸ்த[120] செய்து சந்திராதித்தவற்[121] கொட்ட கடவாராக செய்து குடுத்தொம். பொங்கு –

9. க்காணிப்பார்க்கு வைத்த . . . விருத்தியொடு . . . . . காணிப்பார்க்கு அனுபவிக்கவும் . . . க்கெண்ணைக்கும் பற்றாமையில் இன் நிலத்துக்கு வந்த இறை எப்பெர்ப்பட்டதும் மஹாசபையொம்[122] இறுத்துக் குடுக்க கடவொமாகவும் இன்நிலங்களுழுதாரை . . . . . . . . கப் பெரு . . . . கொள்ளும் எட்டரை பொதி நெல்லு . . . . ரூப[123] . . . . . . . . ருத்தியில் த . . . . . . . . . . . யொம் கெசுவச்செரி கொங்கை கட்டி திருவரங்கு கர்மவித்தனம் திருநாணச்செரி எமபெரு ஆவத்தன் சிவதெவ பட்டனும்[124] மாதவச் செரி . . . . . . . .

10. அன்நிலங்களிலெ (வரி) சை செய்து கொள்ள . . . . . பட்டவிருத்தி[125] யாவதாகவும் மனைக்கெல்லைப் புற மாகவும் மாஹாஸஹையொம் சந்திராதித்தவற் நிற்பபதாகப் பணிப்பணியால்ப் பணித்து ஸபா வ்யவஸ்தை[126] செய்தொம் பெருங்குறி ஸஹையொம் சாந்த மங்கலத்து . . . . . . த்தவம் கெய்க்கிரம வித்தனும் சிறு பிரம்பில் நீலகண்டன் . . . . ஸொமயாஜி யாரும் க . . . . . . க்ருஷ்ண க்ரம வித்தனும்[127] கொவிந்சச் செரி புளிகராத்து நாராயணன் புர . . மனும் . . . . .

* * *

111) ர்த்யதைந் 112) கூட்டியிருந்து 113) சபாவியவஸ்தை 114) ஸ்தபூமி 115) ந்தஅறுகாணி
116) 3மாவில் 117) 3மாவில் 118) கால்காணி 119) அடைந்த 120) ஸபாவியவஸ்த
121) சந்திராதித்தவல் 122) மஹாசபையோன் 123) ரூப 124) சிவதேவபட்டனும் 125) பட்டவிருத்தி
126) வியவஸ்தை 127) கிருஷ்ணகிரமவித்தனும்

க.எண் : 11

இடம் : கருவறை வடக்குப்பட்டி

மன்னன் :

ஆட்சியாண்டு :

செய்தி : நெல் அளிக்கப்பட்ட செய்தி.

1. இப்பரிசைய் இவ்வாண்டு ஸ்ரீ கொயிலுக்குமாக இப்பதினாலு ஆ . . . . . . . வியும் [illegible]யாமமும்[128] திருப்பள்ளி எழுச்சியும்.
2. . . . . .ட்டக் கடவாராகவும் ஸங்கராந்திகளும் [illegible]ணமும்[129] மற்றும் திருக்க [illegible] ணங்கள்[130] உள்ள பொது இப்பதினாலாளும் முட்டாமெ கொட்ட கடவாராகவும் இப்ப. . .
3. குலாளிலும் ஸந்திதொறும் முட்டி ஆளாக ஆனால் அறுகுழி நெல்லு இதெவர்கெ பண்டாரமாக இவ்வாண்டு ஸ்ரீ கார்யஞ் செய்வாரெ தன்

க.எண் : 12

இடம் : கருவறை வடக்கு குமுதம், ஜகதி

மன்னன் : இராசேந்திரன்

ஆட்சியாண்டு : 20 (கி.பி. 1032)

குறிப்பு : மெய்க்கீர்த்தி மட்டும்

பகுதி 2

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திருமன்னி வரை இருநில மடந்தையும் பொச் செயப் பாவையும் . . . . . வனவெலிப் படர்வன வாசியுஞ் சுள்ளி சூழ் மதிட் கொள்ளிப் பாக்கையு நன்னாற் கருமுரண் மண்ணைக் கடக்கமும் பொருதட ரீழத் தரையர்த முடியுமாங்கவர் தெவிய ரொங் கெழில் முடிவு முன்னவர் பக்கற் றென்னவர் வைத்த சுந்தரமுடியு மிந்திரனாரமுந் தெண்டி . . . . . . . . . . றி படைக் கொளர் முறைமையிற் சூடுங் குல தன . . . . பலர் புகழ் முடியும் . . . . .
2. . . யுஞ் சங்கதிர் வெலைத் தொல்பெருங் காவற் பல் பழந்தீவு . . . . . திய செம்பொற்றிருத்தகு முடியும் பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்டொளித்த சயசிங்கன எப்பரும் புகழொடு பிடிய விரட்டபாடி யெழரை யிலக்கமு. நவநெதிக் குலப்பெரு மலை களும் விக்கிரம வீராச் சக்கரக் கொட்டமும் . . . .
3. ம் பாசடைப் பழன மாதணி தெசமும் ஆதிவன . . . . பலசனத்தொடு நிறை குலதனக் குவையுங் கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷையமும் பூசுரர் சொ்நற் கொசலை நாடும் தன்மபாலனை வெம்முனையழித்து வண்டுறை சொலை தண்ட புத்தியும் . . . . . . . . கொவிந்த சந்தந் மாவிழிந் . . . . தங்காத சாரல் வங்காள தெசமுந் தொடு கழ . . .

பகுதி 2

4. சங்கு வொட்டின மயிலாளனை வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித்தருளி . . . . . . . . பண்டாரமு . . . ங்கட லுத்திரலாடமும் வெறிமலர் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும் அலைகடல் நடுவுட் பலகலஞ்செலுத்தி சங்கிராம விசையவுத்துங்க வர்மனாகிய கடாரத் தரைசனை வா . . . கடக்கும்பக யொடுமகப்படுத்தி . . . .
5. மணிக்கதவுமு நிறைசீர் விசையமுந் துறைநீர் பண்ணையு . . . . . . . . . ன் மலையூருமா . . . . . . . கமு சூழ் மாயிருடிங்கமுங் கலங்கா வல்வினை யில(ங்)கா

128) அந்தயாமமும் 129) கிரகணமும் 130) திருக்கல்யாணங்கள்

சொவமுங் கொப்புற நிறைபுனல் மாபப்பாளமுங் காவலம் புரிசை மெவிலி
பங்கமும் விளைபந்தூரிடை வளைப்பந்தூறுங் கலைத்தக்
கொர் . . .

பகுதி 3

6. . . . ட்டனும் பணியால் வ்யவஸ்தை . . நிவந்தம்[131] எழுதி னென் இவூர் மத்யஸ்தன்[132] சிங்கன் அம்பலத்தாடி யான் இரண்டாயிரவனென் இவை என்னெ . . .
7. . . . மாப்பொரு தண்டாற் கொண்ட கொப்பர கெஸரி வர்மரான[133] உடையார் ஸ்ரீராஜேந்த்ரசொழ தேவற்கு[134] யாண்டு உய[135] ஆவது தென்கரைப் பாண்டி கு

* * *

க.எண் : 13 இடம் : கருவறை மேற்குப்பட்டி
மன்னன் : இராசேந்திரசோழன் – I ஆட்சியாண்டு : 7 (கி.பி. 1019)
செய்தி : ஆற்றுவாரியம் பற்றிய செய்தி

1. சீர்த்தனிச் செல்வியும் தன்பெருந் தெவியராகி இன்புறு நெடுதுயல் ஊழியுழியுள் இடைதுறை நாடு துடர்வன வெரிப்படர்வன.
2. . . . த்த சுந்தரமுடியும் இந்திரனாரமும் தெண்டிரை ஈழ ம(ண்)டல முழுவதும் எறிபடைக் கொளர்முறை மையில் சூடும் குலதனமாகிய பலர்புகழ் முடியும்.
3. கருதி இருத்திய செம்பொற்றிருத்தகு முடியும் பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்டொளிச்ச சயசிங்கன் அளப்
4. . . பாண்டி குலாசனி வளநாட்டு ஸ்ரீ சொழ (ம) ஹா ச் சதுவெதி மங்கலத்து பெருங்குறி ஸபையொம் இவ்வாட்டையில்
5. நம்மூர் முன் யாண்டு எ ஆவது தனித்தண்டல் தண்டின சிற்றுறையூர் உடையான் இருந்து ஹா ஸஹையொமெ ஓராண்டு வாரியஞ் செய
6. ன ஆற்று வாரியமும் ஓராண்டு செய்தார் எதிர் அய்யாட்டை நாள் வாரியங் செய்யப் பெருரென்று திருவாணை கூறி பணிச்சு ஸபாவ்யவஸ்தை[136]

க.எண் : 14 இடம் : கருவறை மேற்குகுமுதம்
மன்னன் : இராசேந்திரன் – I ஆட்சியாண்டு : –

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னி வரை இருநில மடந்தையும் பொற் செயப் பாவை . . . . . . . . . . . . . . . . . . நெடுதுயில் ஊழிஊழியுள் இடை
2. பொருகடல் ஈழத்தரைசர் தம் முடியும் ஆங்கவன் தெவியர் ஒங்கெழில் . . . . . . . . . . . . . . . . . . ரமும் இந்திரகுரமும் தெண்டிரை ஈழ மண்டல முழுவ . . . . . .
3. . . . ந்தீவும் மாப்பொரு தண்டாற் கொண்ட கொப்பர கெசரி பந்மரான ஸ்ரீராஜேந்த்ர சொழ தெவற்[137] . . . . . . . . . மஹாதேவி[138] சதுர்வேதி மங்கலத்
4. தாவணத்தெ யஜ்ஞ[138a] செய்வித்துக் கூட்டக் குறைவாத கூடி இருக்க இவ்வூர்த் தநித்தன் . . . . . . . . . மஹா ஸபையொம் ஸபா[139] விவ . . . .

---

131) வ்யவஸ்த்தை . . நிவந்தம் 132) மத்யஸ்தன் 133) பம்மரான 134) ஸ்ரீராஜேந்திரசோழ தேவற்கு 135) உய – 20 136) சபாவயவத்ஸை 137) ஸ்ரீராஜேந்திரசோழ தேவற் 138) மகாதேவி

5. அவ்வாட்டை நாளைக்கு உள்ள ஊர் ..... உய்யக் கொண்டந்........
6. ........ செய்ய அனு ............ பணித்து ஸபா வ்யவஸ்த[140] .....
7. ........ ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னி வளர இருநில மடந்தை .....

* * *

க.எண் : 15 இடம் : கருவறை மேற்கு, வடக்குப்பட்டி
மன்னன் : – ஆட்சியாண்டு : –
செய்தி : உய்யக்கொண்டான் ஆற்றுவாரியம் பற்றிய செய்தி.

1. ... இப்பரிசு அருளச் செய்து வந்தபடியை முன் செய்த ஸபா வ்யவஸ்த[141]
அழியப் பணித்த திருவானைக் கூற்றுவிட்டு முன் கீழ்நடை (செய்) கிற வண்ணமெ ஊர் வாரியமும் உயக்கொண்டான் ஆற்று வாரியமும் செய்யப் பெறு வார்கள்
2. ... செய்தொம் பெருங்குறி ஸபையொம் தாமொதிரச் செரி திருவரங்கத்து சாத்தன் எஞ்ஞாற்பபனும் மதி ஸூதனச்செரி[142] அன்பில் நாராயணன் ... னும் விஷ்ணுச்[143] செரிச்ன்னக்குறி ...
3. ... எழுதினென் இவ்வூர் மத்யஸ்த[144] திருவரங்க நாரா யணன் திருவெண்ணாவல்லான் ப்ரஹ்மப் பிரிய[145]னென் இவை என்னெழுத்து.

* * *

க.எண் : 16 இடம் : கருவறை தெற்குப் பட்டிகை
மன்னன் : முதலாம் இராசராசசோழன் ஆட்சியாண்டு : –
குறிப்பு : இக்கல்வெட்டு முற்றுப்பெறவில்லை.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் பொல பெருநிலச் செல்வியுந் தனக்கை உரிமை .....
2. கொள் ஸ்ரீ கொராஜராஜ ராஜகெஸரி பன்மராந[146] ஸ்ரீ ரா .....
3. ன்நும் பட்டம் ஒன்றால் பொன் அறுகழஞ் .....

---

138a) தந்மி 139) மகாசபையோம் சபா 140) சபாவியவஸ்த 141) ஸபா வ்யவஸ்த
142) மதிசூதனச்சேரி 143) விஷ்ணுச்சேரி 144) மத்யஸ்தன் 145) பிரஹ்மப்பிரியனென்
146) ஸ்ரீ கொராஜராஜ ராஜகேஸரி பன்மராந

இக்கோயில் கல்வெட்டுகளை படிக்கவும், ஆய்வுக்கும், உதவிய தொல்லியல்துறை கல்வெட்டாய்வாளர்கள் முனைவர் சு. இராசகோபால், முனைவர் பத்மாவதி ஆகியோருக்கு நன்றி.

முடுக்குப்பட்டி பேரூர் விளக்குத்தூண் கல்வெட்டு 44–ஆம் பக்கத் தொடர்ச்சி

**பேரூர் விளக்குத்தூண் கல்வெட்டு 2**

(மேற்கு முகமாக)

ெ
ப
ரி
ய
ண்
ண
ன்

நம்முன்னோர்கள், தெய்வத்திருத்தலங்கள் இருளில் ஒளியின்றி இருக்கலாது எனக்கருதி கல்தூண் நட்டு அதன் மீது லாந்தர் விளக்கு பொருத்திவைத்தனர். இன்று மின்சார விளக்குகள் வந்த பின்னும் திருக்கோயில்களில் பல ஒளியின்றி இருண்டு காணப்படுவது மிகவும் வருந்தத்தக்கது.

# கடைசர் குல பட்டங்கெட்டியார்கள்

**- செந்தீ நடராசன்**

நாகர்கோவில், கோட்டாறு புனித சவேரியார் கோயில் அருகே ஏகாலியர் மடம் என அழைக்கப்படும் உமிக்கரி மடம் இருந்த இடத்தில் உள்ள கோயில் அருகே கண்டடுக்கப்பட்டுள்ள ஒரு (சுமை தாங்கிக்) கல்லில் உள்ள கல்வெட்டு இது.

1. துளது௰ஞூ
2. அல்ப்பசிய
3. ௰ உ. கொட்டா
4. று கடைசன்
5. பூமிபட்டகெட்டி
6. மகன் பெரு
7. மாள் பட்ட கெ
8. ட்டி க்கு
9. குமரன் துணை





உச்சியில் வேல் பொறித்த இக்கல்வெட்டின் வரிகள் "990 வருடம் அல்ப்பசி மாதம் 12 கொட்டாறு கடைசன் பூமி பட்ட கெட்டி மகன் பெருமாள் பட்ட கெட்டிக்கு குமரன் துணை" என்று உள்ளது.

கொல்லம் ஆண்டு 990-க்கு நேரான ஆண்டு கி.பி. 1814

கோட்டாறு கடைசன் குலத்தைச் சார்ந்த பூமி பட்டங் கெட்டி என்பாரின் மகன் பெருமாள் பட்டங்கெட்டிக்கு குமரன் துணை - என்பதால் பெருமாள் பட்டங்கெட்டி என்பாரின் அகால மரணத்தில் நிறுவப்பட்ட சுமைதாங்கியில் அல்லது நினைவுக் கல்லாக இது இருக்க வேண்டும். ஏகாலியர் மடம் அருகே சுமைதாங்கிக் கல்லாக இருந்த இக்கல் சுவரோடு சேர்ந்து கிடந்தது கண்டு, எழுத்துக்கள் இருந்ததால் சமீபத்தில் நிமிர்த்தி நிறுத்தியுள்ளனர்.

இது அகால மரணமடைந்தவரின் நினைவுக் கல்லாக இருக்க வேண்டும். (அங்குக் காணப்படும் 'குமரன் துணை' போல, புன்னார்குளம் மலையாம் பட்டாளத்தில் தூசுப்படையில் இருந்த மரணமடைந்த ராமன் பிள்ளை கல்வெட்டிலும் ராமன் பிள்ளைக்கு வேலாயுதம் துணை என்று முடிகிறது. கடைசன் என்ற குலம் கடையன் என்றும் அறியப்படுகிறது. இச்சமூகத்தினரின் அநேக குடும்பங்கள் சவேரியார் கோயிலின் வடப்பபுறம் வாழ்ந்திருந்திருக்கின்றனர். அவர்களின் பத்ரகாளியம்மன் கோயில் ஒன்று அங்கே இருந்திருக்கிறது. (சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்தான் பிடி மண் எடுத்துத் தெற்கு வன்னியூரில் கோயில் அமைக்கப்பட்டிருக்கிறது.)

தற்போது அப்பகுதியில் அக்குலத்தவர் யாரும் இல்லை. வீடு நிலங்களை விற்று விட்டுச் சென்று விட்டனர். அவர்களின் குலத்தொழில் பனை ஓலையில் இருந்து முறம், பெட்டி முதலியன செய்வது. தற்போது இக்குலத்தோர் கோட்டாறு, வடசேரி, புத்தேரி முதலிய இடங்களில்

இருக்கின்றனர். சுமார் 25 முதல் 30 குடும்பத்தினரே குமரி மாவட்டத்தில் இருப்பர் எனக் கூறுகின்றனர். பாவூர் சத்திரம் பகுதி, வள்ளியூர், நெல்லை பேட்டை கடையனோடை, தூத்துக்குடி முதலிய இடங்களிலும் இக்குலத்தவர் இருக்கின்றனர். நெல்லை மாவட்டம் பாவ நாசம் கோயிலிலும் இச்சமூகத்தினர் சார்பில் 8-ஆம் திருவிழா மண்டகப் படி நடைபெறுகிறது. திருநெல்வேலி அப்பர் சாமி கட்டளை 100 ஆண்டுகளுக்கு மேலாக நடைபெறுகிறது. குற்றாலம், ஏரல், ஆத்தூர் போன்ற ஊர்களிலும் கோயில் திருவிழா மண்டகப்படிகள் முன்காலத்தில் நடந்ததாகத் தகவல்.

திருச்செந்தூர் தேரடி முடுக்கினை அடுத்தத் தெற்குத் தெருவில் கடைசர் குலம் மடம் உள்ளது. (நெல்லை பேட்டையில் உள்ள சிதம்பரப் பட்டங்கெட்டியார் பொறுப்பு) காயல்பட்டினம் பகுதியில் 2000 குடும்பங்கள் இருந்ததாகவும் அவை காலப்போக்கில் ராமேஸ்வரம், அக்காள் மடம், தங்கச்சி மடம், தண்ணீரூற்று போன்ற இடங்களுக்குப் பிரிந்து சென்றனர் என்றும் கூறப்படுகிறது. எட்கார் தர்ஸ்டனின் தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் என்ற நூலில் கடையன், கடைசி என்று பொருள்படும். இவர்கள் பள்ளர்களின் கிளைச் சாதி. இவர்கள் ராமேஸ்வரப்பகுதியில் சுண்ணாம்பு சிப்பிகளைச் சேகரித்துச் சுண்ணாம்பு நீற்றுபவர்கள் என விவரிக்கப்படுகின்றனர். இவர்களில் இருந்தே இன்று முத்துக் குளிப்பவர்கள் தேர்வு செய்யப்படுகின்றனர். சென்னை, திருநெல்வேலி கடற்கரை வாழ் இவர்கள் பரவர்களைப் போல புனித சவேரியாரால் கிருஸ்துவத்திற்கு மதமாற்றம் செய்யப்பட்டவர்கள் எனக் கூறப்படுகிறது.

**கள ஆய்வு:**

குமரிமாவட்டத்தில், கோட்டாறு, வடசேரி பகுதிகளில் வாழும் இவ்வின மக்களிடம் நடத்திய கள ஆய்வில் கிடைத்த தகவல்கள் இவை. இவர்கள் கடைசர் குலப் பட்டங்கட்டியார்கள் என்று அழைக்கப்படுபவர். சமீப காலம் வரையிலும், இன்றும், பெயருடன் பட்டங்கெட்டி என்று போட்டுக் கொள்கின்றனர். காலம் காலமாகச் செய்து வரும் தொழில் பனை ஓலை பயன்படுத்தி பெட்டி, முறம் போன்றவை செய்து விற்பதாகும். (எட்கார் தர்ஸ்டன் குறிப்பிடுவது போல) சுண்ணாம்பு நீற்றும் தொழில் தங்களுடையது இல்லை என்று மறுக்கின்றனர். பள்ளர்களில், ஒரு பிரிவு என்பதையும் மறுக்கின்றனர். முத்துக் குளித்தல் போன்ற கடல் தொடர்பான தொழிலும் இல்லையென மறுக்கிறார்கள்.

இவர்கள் தற்போது எண்ணிக்கையில் அருகியே காணப்படுகின்றனர். தாங்கள் பள்ளர் சமூகத்தின் உட்பிரிவு (எட்கார் தர்ஸ்டன் குறிப்பு) என்பதை மறுக்கும் அவர்கள் தாங்கள் தேவகோட்டை பகுதிகளில் இருந்து வரும் தேவர் சமூகத்தினர் பாதுகாவலர் என்றும், அங்கிருந்து வருவோருக்கு சில காலங்கள் முன்வரை தங்கள் வீடுகளில் தங்க வைத்து விருந்தளித்து ஊர் திரும்பும் போது பணம் கொடுத்து அனுப்பும் பழக்கம் இருந்தது என்றும் குறிப்பிடுகின்றனர்.

தங்களின் பூர்வீகம் காஞ்சிபுரம் என்றும், தாங்கள் முன்னோர் மந்திர தந்திரங்களில் சிறந்து விளங்கினர் என்றும், காவரா செட்டிகளுக்கும் தங்களுக்கும் ஏற்பட்ட பகையால் தெற்குப் பகுதிக்கு வர தேர்ந்ததாகவும் குறிப்பிடுகின்றனர். (இவர்கள் குறிப்பிடும் காவரா செட்டி என்பார் தெலுங்கு பேசும் சித்தாசிகள் என்றழைக்கப்படும் நபர்கள் என்று தோன்றுகிறது - பெரிய வெள்ளை நிறமேலங்கி, இடுப்பு கச்சை, வில்லையுள்ள பெரிய

தலைப்பாகை அணிந்து, தோள்பையுடன் , பெரிய மணி, தடியுடன் ஊரில் தர்ம ஏற்க வருவார்கள். பிச்சை ஏற்ற வீட்டில் காவி அடையாளம் இட்டுச் செல்வர். கூட்டமாக வரும் அவர்கள் ஒரு வீட்டில் ஒருவர் தருமம் ஏற்றால் அடுத்தவர் பெறுதில்லை.)

**திருநெல்வேலி மாவட்ட கெசட்டியர் தகவல்**

இத்தகவல்களுக்கு 1917இல் வெளியிடப்பட்ட சென்னை மாவட்ட கெசட்டியர் - திருநெல்வேலி தொகுதி 1; பக்கம் - 145; 147 விவரங்களுடன் ஒத்துப் போகின்றன.

(1) சிறிய சமூகம் (1901-இல் 1811 பேர்)

2) இவர்களின் வழக்கமான சாதிப்பெயர் பட்டங்கெட்டி சில சந்தர்ப்பங்களில் நீத்தரசன் என்றும் அழைத்துக் கொள்கின்றனர் - அவர்கள் தூத்துக்குடியில் சுண்ணாம்பு நீத்தும் தொழிலைக் குறிப்பிடுகிறது - (ராமன் இலங்கைப் பாலம் கட்ட இச்சமூகத்தின் சுண்ணாம்பு நீற்றிக் கொடுத்தாகச் சொல்லிக் கொள்வர்.)

அம்பபாசமுத்திரப் பகுதியில் புலவன் அல்லத மேஸ்திரி என்றும் சோழிய வெள்ளாளன் என்றும் சிலர் அழைத்துக் கொள்கின்றனர். பிள்ளை பட்டம் போட்டுக் கொள்கின்றனர்.

3) முக்கிய தொழில் பாய், கூடை (பெட்டி), மீன்பிடி,கூடை, விசிறி முதலியன பனை ஓலைகளில் செய்வது. அம்பா சமுத்திரத்தில் சிலர் மரக் கொம்புகளில் இருந்து நேர்த்தியான மூக்குப்பொடி டப்பி முதலியன செய்வர்.

இவர்களில் சிலர் மருத்துவர்களாக இருக்கின்றனர். மருத்துவத்-துடன் மந்திர உச்சாடனமும் செய்து நோய் குணப்படுத்துகின்றனர்

4) இவர்களின் ஊர்களில் தலைவரே ஊர் பட்டங்கெட்டி சமூகப் பொதுத் தலைவர் நாட்டுப் பட்டங்கெட்டி- திருச்செந்தூர் தாலுகா கடையனோடையில் இருக்கிறார். இவர் குடும்பம் தற்போது கிருஸ்தவர் களாயினும் சமூகத்தலைமை உரிமை முதலியன பாதிக்கப்படவில்லை.

5) ஒரு காலத்தில் வலங்கை இடங்கையர் சண்டையில் கடைசர்கள் கம்மாளர் பக்கம் சேர்ந்து காவரா செட்டிகள் தலைமையிலான வலங்கையரை எதிர்த்துச் சண்டையிட்டனர். அதில் ஏழுபேரே உயிர் பிழைத்து ஊத்துமலை கலங்களில் உள்ள கொண்டையன் கோட்டை மறவர்களிடம் தஞ்சம் புகுந்தனர் என்று இவர்களின் சமுதாய வரலாறு விரிகிறது. பின்னர் ஏழுசாதிகளில் பெண் எடுத்து, தாங்கள் தஞ்சம் புகுந்த மறவர்கள் போல ஏழு கிளைச் சாதிகளாக வாழ்ந்து வம்சம் பெருகினர்.

(1) குட்டினி - கொசலப்பெண் மணந்தவர்

(2) அட்டுகுட்பு - இடையன்

(3) தொம்பப்புலவன் - தொம்பன்

(4) நாயினான சக்கரவர்த்தி - பாணான்

(5) நீத்தானி - பரவன்

(6) காவடி - சாணான்

(7) தச்சிலை - வண்ணான்

புலால் உண்ணும் பழக்கமுடைய இவர்கள் வயது வந்த பின்னரே திருமணம் முடிக்கின்றனர். விவாகரத்தும், விதவை மறுமணமும் இச்சமூகத்தில் அனுமதிக்கப்படுகிறது.

**முடிவுகள்**

குமரி மாவட்டத் தகவலாளர்களுக்கு ராமநாதபுரம் முதலிய பகுதிவாழ் மக்கள் முத்துக் குளித்தல் தொழிலை ஏற்றுக் கொண்டிருந்தது தெரியாதிருந்திருக்கலாம்.

வலங்கையர் - இடங்கையர் மோதல் குறித்த சமூக வரலாறும் காவரா செட்டிகள் பற்றிய இவர்கள் தகவலும் கெசட்டியார் தகவலுடன் ஒத்துப் போகின்றன.

மோதலுக்குப் பின் தேவர் சமூகத்தினர் தஞ்சமளித்த தகவலும், கள ஆய்வில் தேவர் சமுகத்தினர் இங்கு வந்து விருந்தேற்றுப் பணம் பெற்றுச் செல்வதோடு ஒத்துப் போகிறது.

ஏழுசாதி பெண்களை மணந்து ஏழு கிளைகளாக விரிந்த கெசட்டியரின் சமூக வரலாற்றுத் தொன்மக்கதை, இன்றும் வெவ்வேறு ஊர் இவ்வின மக்களிடையே காணப்படும் ஏற்றதாழ்வுக்கும், எட்கார் தர்ஸ்டன் பள்ளர்களின் உட்பிரிவு என்று குறிப்பிடுவதற்கும் காரணமாகியிருக்கலாம். அனைத்துக் கிளைகளுக்கும் இது பொருந்துவதாகாது என்பதால் குமரி மாவட்டப் பட்டங்கெட்டியார்களின் இதுபற்றிய மறுப்பு பொருளுடையதாகிறது.

இவர்களின் தொழில் முற்காலத்தில் சமூகப் பயன்பாட்டு முக்கியத்துவமும், தேவையுமுடையதாக இருந்தது என்பதை மணங்கொள்ளும் போது இச்சமூகம், பொருளாதார ரீதியாக வலுவுடன் இருந்தது என்பதை உணரமுடியும். எனவே சமூகத் தலை மக்கள் என்ற மதிப்புட,ன் பட்டங்கட்டிப் பட்டமும் அரசர்களால் அளிக்கப்பட்ட பெருமையுடையது. இச்சமூக மக்களின் தற்கால நிலை தலைகீழாக உள்ளது.

**மேல் ஆய்வுக்குரியன**

(1) ஒவ்வொரு ஊர் பட்டங்கெட்டியார்களின் சமூகக்கதைத் தொன்மங்கள் சேகரிப்பு.

(2) காஞ்சிபுரத்தில் நிகழ்ந்தததாகக் கூறப்படும் வலங்கையர் - இடங்கையர் மோதல் பற்றியும் அதில் இச்சமூகத்தினரின் பங்கு பற்றியும் ஆய்வது

(3) இவர்களின் மாந்தரீக மற்றும் நோய் குணப்படுத்தும் முறைகளோடு காவரா செட்டிகளின் மாந்தரீக ஆற்றல் கதைகளை ஒப்பீடு செய்வது.

(4) 'பட்டங்கெட்டி' என்பதற்கான செப்பேடு, முதலிய ஆதார ஆவணம் கண்டறிவது அல்லது வரலாற்றுத் தகவல் சேகரிப்பது.

(5) காஞ்சிபுரம், திருவாரூர் திருவிநாயகர் கோயில் முகவறை, ஸ்ரீரங்ககோபுரம், திருவானைக்கா, திருப்பெருந்துறை தெப்பத்து வாசல், திருவம்பல மூலஸ்தானம், நெல்லை கரியமாணிக்க ஆழ்வார் கோயில், மதுரை மீனாட்சி அம்மன் கோயில், தென்காசி கோயில் சன்னதிப் படி, குற்றாலம் சன்னதிப் படி, ஆகிய இடங்களில் உள்ள கல்வெட்டுச் செய்திகள் ஆராயப்பட வேண்டும்.

*(6) பிரம்பு நார் பயன்படுத்திப் பெட்டிகள் முதலியன செய்யும் வேடர் சமூகத்தினர், பனை பொருள் பயன்படுத்திப் பெட்டி முதலியன செய்யும் கடைசியர் - இவ்விரு சமூகத்தினரின் நிலம் சார்ந்த சமூக மானுடவியல் கூறுகளை ஆய்வது சுவையான முடிவுகள் தரக் கூடும்.*

**துணை நின்றவை**

(1) Edgar Thruston - Castes & Tribes of South India. Vol - III K. Page-6/

(2) Madras District Gazetteer - Tirnuelveli Vol-I page: 145-147(1917)

**நன்றி**

*1) குமரிமாவட்ட வரலாற்று ஆய்வுமையச் செயலர் டாக்டர் எஸ.பத்மநாபன் அவர்கள் இக்கல்வெட்டை மாவட்டத் தொல்லியல் அலுவலர் திரு.தே.கோபாலனுடன் இனங்கண்டு வெளிப்படுத்தினர் (தினமலர் - 08.08.2000. இதழ்). அக்கல்வெட்டிற்கு மறுவாசிப்பு தேவை எனத் திரு.தே.கோபாலனும் நானும் உணர்ந்து, நான்கைந்து முறை சென்று, முயன்று, இத்திருந்திய வாசிப்பு வெளிப்படுத்தப்படுகிறது. இவ்வாசிப்பே, ஒரு சமூகவியல் செய்தி தருவதாகவும் உண்மையானதாகவும்படுகிறது. முன்னோடிகளான இவர்களுக்கும், மீண்டும் மீண்டும் சென்ற போதும் சலிக்காது உடனிருந்த உதவியஏகாலியர் மடத்தைச் சேர்ந்த நூலகர் ஆசிரியர் திரு. கண்ணன் அவர்களுக்கும் நன்றி.*

*2) கடைசன் என்ற சொல் சாதியைக் குறிக்கிறது எனச் சரியாக வழிகாட்டி மேல் தகவல்கள் அளித்த கொற்கைக் காப்பாட்சியர் திரு.எஸ்.இராமச்சந்திரனுக்கு நன்றி. இவரே இத்தகைய கல்வெட்டு ஒன்று உண்டென்று தேடிப்பார்க்கத் தூண்டியவர்.*

*3) கள ஆய்வின் போது தகவல்களைத் தந்த கோட்டாறு திரு.சுடலைமுத்துப் பட்டங்கெட்டியார், கற்பகம், விஜயலெட்சுமி, வடசேரி திரு.சண்முகவேலுப் பட்டங்கெட்டியார், சிவகாமி, புத்தேரி திரு.சண்முகம் பட்டங்கெட்டியார் குடும்பத்தினர் ஆகியோருக்கு நன்றி. இவர்கள் பற்றிய முதல் தகவல் அளித்த ஆசிரியர் திரு.ஆரோக்கியமுத்து அவர் மனைவியார் தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர் திரு.நடராஜன் ஆகியோருக்கு நன்றி. காப்பாட்சியர் திரு.எஸ்.ராமசந்திரன் மூலமாக கடையனோடை திரு.செல்லப்பா அளித்த தகவல்களுக்கும் நன்றி.*

**நன்றி! நன்றி! நன்றி! நன்றி! நன்றி!**

எமது பழங்காசு இதழை மக்களுக்கு அறிமுகம் செய்து செய்தி வெளியிட்ட

1) உங்கள் பாரதி – புதுச்சேரி
2) செம்பருத்தி – கோலாலம்பூர்
3) ஓம் சக்தி – கோயம்புத்தூர்
4) THE HINDU – சென்னை
5) இறக்கை – முருகம்பாளையம்
6) பயணம் – பெங்களூர்

ஆகிய இதழ்களுக்கு எங்களின் மனமார்ந்த நன்றி.

பழங்காசு இதழ் : 4 – மெய்புத்திருத்தம்

முனைவர் கு. திருமாறன், தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு)

பெரியார் ஈ.வெரா. கல்லூரி, திருச்சிராப்பள்ளி

# தனிச்சியம் கண்மாய்மடைக் கல்வெட்டு ஒரு பார்வை

- கரு. இராசேந்திரன்

மதுரை நாயக்க மன்னர்களில் ஒருவரான விசுவநாத நாயக்கர் காலத்தில் நிர்வாக வசதிக்காகவும் ஆட்சி மேம்பாட்டிற்காகவும் தமிழகம் பல பாளையப்பட்டுகளாகப் பிரிக்கப்பெற்று ஆங்காங்குள்ள செல்வாக்கு மிக்க தலைவர்களின் கீழ் ஒப்படைக்கப்பெற்றது. தமிழகத்து பாளையப்பட்டுகளில் சில ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் அதாவது கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் சமீன்தார் நிலைக்குத் தாழ்த்தப்பட்டதும் உண்டு. அத்தகைய சமீன்களில் அம்மையநாயக்கனூர் சமீனும் ஒன்றாகும்.

அம்மைய நாயக்கனூர் திண்டுக்கல் மாவட்டத்தில் மதுரைக்கும் திண்டுக்கல்லுக்கும் நடுவில் மதுரை - திண்டுக்கல் நெடுஞ்சாலையில் மதுரையிலிருந்து 35 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள சிற்றூராகும். இவ்வூரைத்தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த குறுநிலத் தலைவர்கள் தான் அம்மையநாயக்கனூர் சமீன்தார்களாவர்.

இச்சமீன்தார்களின் ஆட்சி எல்லைக்குட்பட்ட கிராமங்களில் ஒன்றான தனிச்சியம் கிராமத்தில் அம்மையநாயக்கனூர் சமீன்தார்களில் ஒருவரான அம்மைய கனக நாயக்கர் தனிச்சியம் கண்மாயில் மடை செய்து மடைத்தூண் நாட்டியதையும் அக்கிராமம் என்றென்றும் நிறை விளைச்சலாக இருக்க வேண்டியும் தெய்வத்தை வேண்டிக்கொண்டு செய்தமைத்த மதுரை மாவட்டத்தின் தனிச்சியம் கண்மாயிலுள்ளதும் இக்கட்டுரை ஆசிரியரால் கண்டறியப் பெற்றுப் படியெடுக்கப்பெற்று படிக்கப்பட்டதுமான கல்வெட்டை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

கல்வெட்டின் காலம் சாலிய வாகன சகாத்தம் 1724. அதாவது கி.பி. 1802 ஆகும். அறுபது தமிழ் வருடங்களில் ஒன்றான துந்துபி எனத் தவறாகக் குறிக்கப்பெற்றுள்ளது. பஞ்சாங்க குறிப்புகளாக பூர்வபட்சத்துத் திருதிகை, பூசநட்சேத்திரம், வெள்ளிக்கிழமை, அருஷண நாமயோகம், கவுல வாகரணம் ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. அருபத்தாரு மண்லீகர் கண்டன், வெள்ளைப் பதக்கறைடால், வீரகண்டாமணி விருது, சாமத்துரோகர் கண்டன், வஸக்கர கண்டன் (அதாவது எதிரியை தன் வயப்படுத்தியவன்) சனகைக்குத் திரிநரசிம்ம மூர்த்தி, பரசு சேவை அகலாதவன், ராசாதி ராசன் என்ற நீண்ட விஜயநகர மெய்கீர்த்தியை கூறிக்கொள்கின்றனர். யதுகுல திலக வம்சத்தாராள் என்பதால் திருமாலின் ஒரு அவதாரமான கண்ணனை வணங்குபவர்களாக இருக்கலாம். வேதவியாச பட்டாச்சாரியர் குரு என்று கூறுவதில் பாரதம் பாடிய வேத வியாசரைக் குருவாக ஏற்றுக் கொண்டவர்-களாக இருக்கலாம் அடுத்து அம்மையநாயக்கனூர் சமீன்தார்களின் வம்சாவழியில் அம்மைய கனகநாயக்கர் (1) அவர் மகன் அம்மையநாயக்கர் (2) அவரது மகன் சங்கு நாயக்கர் (3) சங்கு நாயக்கரின் மகன்கள் ஆறுமுக

நாயக்கர் (4.1) ஆறுமுக நாயக்கரின் இளவல் அம்மைய கனக நாயக்கர் (4.2) என் நான்கு தலைமுறையினரை இனங்கண்டு கொள்ள இது உதவுகிறது. கல்வெட்டு காட்டும் பெஞ்சை நகர், சலுகை ஆகிய ஊர்கள் எவை என்பது ஆய்வுக்கு உரியனவாகும்.

இச்சமீன்தார்களின் ஆட்சிக்கு உட்பட்ட கிராமங்களில் தனிச்சியம் கிராமம் இவர்களின் நேரடி தொடர்புடைய கிராமம் என்பது இதன்மூலம் தெரிகிறது. கல்வெட்டில் மடைத்தூண், தோரணக்கல் எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதுபோக தனிச்சியம் கிராமம் வந்தாத சமுத்திரமாக முப்போகமும் விளையக்கூடியதாக வளமை நிறைந்து விளங்கவேண்டு-மென்று சிறுமலைத் தெய்வங்களையும் வெள்ளிமலை முருகனையும் வேண்டி கல்வெட்டு முடிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

1) உ. சுவத்தி
2) ஸ்ரீ சாலி
3) ய வாகன
4) சகாப்பி
5) த்தம் 17
6) 24
7) கலியுகம்
8) 4903
9) யிதன்
10) மேல்ச்செ
11) ல்லா நின்
12) ற துந்துமி
13) ஆனி
14) மீ 202
15) பூற்வபட்
16) சத்து திறு
17) திகையும்
18) சுக்குரவா
19) ரமும் பூச
20) நட்சேத்தி
21) ரமு(ம்) அரு
22) க்ஷண நா
23) மயோக
24) மும் கவுல
25) வாகரண
26) மும் கூடி
27) ய சுபதின
28) த்தில் பெ
29) ஞ்சை நக
30) ர (ா) திபனி
31) களங்கம
32) ல்ல னிலை
33) க் கோட்டை
34) ராயன் அ
35) ருபத்தாரு
36) மண்டலீ
37) கர் கண்ட
38) ன் வெள்
39) ளை பதக
40) றைடால்
41) வீரகண்டா
42) மணிவி
43) றுது பலவு
44) ம் பெற்றச
45) ாமத்து சே
46) ராகற் கண்
47) டன் வஸ
48) க்கற குலதி
49) லகன் சன
50) கைக்கு திரி
51) நரசிம்ம
52) மூர்த்தி ஸ்ரீ
53) பரசு சே
54) ற் வை அக
55) லாத ராசா
56) தி ராசன் ரா
57) ச மாற்த் தா
58) ன்டன்
59) ராச கெம்
60) பீரன் ரா
61) சகுல தில
62) க யெதுகு
63) ல வமிச
64) த் தரான
65) ராகிய ஸ்ரீ
66) வேத விய
67) ாச பட்டரா
68) சாறியார்
69) குரு கிறு
70) பையுள்
71) ள அம்ன
72) மயக் கன
73) கய னாயக்
74) கறவர்க
75) ள் பவுத்தி
76) ரரான அ
77) ம்மைய

**2ம் பக்கம்**

1) குமா (ர)
2) ரு சங்
3) குனாய
4) க்கறவ
5) ற்கள்
6) புத்திரரா
7) ன ஆரு
8) முகானா
9) பக்கற
10) வர்கள்
11) சகோ
12) தரான
13) அம்ன
14) மயக்
15) கனக
16) ய னாய
17) க்கறவ
18) ர்கள்
19) சொந்த
20) க்கிறா
21) மம் த
22) ளிச்சி
23) யம் க
24) ண்ம
25) ாயில்
26) மடை
27) க்கித் ே
28) தாரண
29) க்கல்
30) ஸ்த்த
31) ம்பம்
32) நிலை நா
33) ட்டி ன
34) வய்த்த
35) படியி
36) னாலே
37) யேக
38) தேச
39) கால
40) மும் வ (த்)
41) தாத
42) சமுத்
43) திரம
44) ாகிய
45) நித்தி
46) ய செ
47) ல் நிதி
48) யாக
49) முப்பூ
50) வும் வீ
51) ரபோ
52) கமாக
53) நிரை
54) வெளை
55) ச்சலா
56) க வினை
57) ஞ்சு சு
58) கவச
59) தியா
60) கயிரு
61) க்க ே
62) வண்டி
63) யதாக
64) சிறும
65) லைத் ெ
66) தய்வ
67) ங்கள்
68) வெள்
69) ளி மலை
70) யான்
71) டி லெ
72) ட்சிக
73) வும்

## நடிகர்திலகத்திற்கு மலரஞ்சலி!

**1-10-1928 - 21-7-2001**



வரலாற்று நாயகர்களான சாக்ரடீசை, நாவுக்கரசரை, ராஜராஜசோழனை, சத்ரபதி சிவாஜியை, நாகமநாயக்கரை, வீரபாண்டியக் கட்டபொம்மனை, கப்பலோட்டிய தமிழனை, மகாகவி பாரதியை, தச்சோளி அம்புவின் தந்தையை, பகத்சிங்கை, திருப்பூர்க் குமரனை நம்மோடு பேசவைத்த ஈடு இணையற்ற நடிகர் திலகம் சிவாஜி கணேசன் **21.7.2001** அன்று வரலாறாயினார். அன்னாருக்கு பழங்காசு தனது பதாகை தாழ்த்தி அஞ்சலி செலுத்துகிறது.





# குருநமசிவாயரின் சீடர் பேரம்பலத்தவர்க்குச் சிதம்பரத்தில் மடம்

- சரித்திரச் செம்மல் ச. கிருஷ்ணமூர்த்தி

*குகை நமசிவாயரின் சீடர் குருநமசிவாயர் சிதம்பரம் வந்து ஆன்மீகப் பணியில் ஈடுபட்டு இங்கேயே சமாதி அடைந்ததும் அது குறித்த கல்வெட்டும் 'பழங்காசு' பேழை-1, இதழ்-3இல் இக்கட்டுரையாசிரியர் கட்டுரையாக எழுதியிருந்தார். அண்மையில் சிதம்பரம் நகரின் மேற்கில் பச்சையப்ப முதலியார் மேல்நிலைப்பள்ளிக்கு அருகில் மன்னார்குடிசாலையில் குருநமசிவாயர் சீடருக்கு மடம் கட்டித்தந்த கல்வெட்டு கண்டறியப்பட்டது. 29 வரிகளைக் கொண்ட அக்கல்வெட்டின் வரிகள் வருமாறு.*

1) சு ப மஸ்து ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம்
2) ன் மேல் செல்லா நின்ற
3) பிறமதி ௵ சித்திரை மீ யஉ தனி
4) யூர் பெரும்பற்றப் புலியூரில் குரு
5) நமசி வாய பண்டாரத்தின் சீஷ(ன்)
6) பேரம்பலத்தவரற்கு மே
7) ற்படி யூரிலே திருச்சிற்றம்
8) பலம் பிரியா அரியநயினார் ஆப
9) த்பாதரானார் ஆட்கொண்டார்
10) உள்பட்டாரோம் மனை விலை
11) ப்பிரமானம் பண்ணி குரு
12) த்தபடி எங்கள் மனையின்
13) தெற்கு தெரு மூன்றாம் வீ
14) தி மேல் துண்டம் தென்சிறகில்
15) அரியநயினார் மனைக்கு மேற்கு
16) ஆபத்கா ருண்ய பெருமாள் ம
17) னைக்குக் கிழக்கு மேலடிகீழ் அருஅ
18) கலிமனை வால்நிலமு விலையா(க)
19) பொன் ௯௰௬ (96)க்கும் இந்த மனைமேல் க
20) ரைப்பூந்துறை நாட்டு மடமாக பே
21) ரம்பலத்துறைவரர் பிள்ளை பிள்ளை
22) தலைமுறையும் சந்திராதித்து வ‌லை
23) ரயும் செங்கொடை நல்லதம்
24) பிகவிண்டர் சிதம்பரநாதன்
25) வந்து சிலசாதனம் பண்ணிய

26) படியாலே மடதன்மம் நடத்

27) திவிக்க கடவராகவும்

28) இளைச்சி கவுண்டன் னா

29) ட்டுத் தன்மம் நடத்தவும்

சக ஆண்டு 1502 இல் அதாவது கி.பி. 1580இல் தனியூர், பெரும் பற்றப்பு புலியூரில் குருநமசிவாய பண்டாரத்தின் சீடர் பேரம்பலத்தவற்கு நயினார் சிலர் கூடி மடம் கட்டித் தருகின்றனர். திருச்சிற்றம்பலம் பிரியா அரிய நயினார், ஆபத்பாதரானார், ஆட்கொண்டார் ஆகியோர் மனைவிலை பிரமானம் பண்ணிததருகின்றனர்.

தெற்குத்தெரு மூன்றாம் திருவீதி மேல்துண்டம் தென்சிறகில் மடம் கட்டப்பட்டது. அரியநயினார் மனை ஆபத் காருண்ய பெருமாள் ஆகியோர் மனைகளுக்கு இடையில் 858 குழிமனையாக மடத்தின் இடம் அமைந்தது 96 பொன் இம்மனையின் விலையாகும். பூந்துறை நாட்டு மடம் என இது அழைக்கப்பட்டது. பேரம்பலத்தவராகிய குருவும் அவருடைய பரம்பரையும் அனுபவிக்க ஏற்பாடு செய்யப்படுகிறது. நல்லிதம்பிக் கவுண்டர் சிதம்பரநாதன் வந்து கல்வெட்டு வெட்டிவைக்கிறார். இளைச்சிக் கவுண்டன் நாட்டுத் தன்மம் நடத்த வேண்டும் என்று கல்வெட்டு முடிகிறது.

திருவிரிஞ்சிபுரம் கல்வெட்டில் இடம்பெறும் சின்ன அம்பல நாயகப் பண்டாரத்தார் (கி.பி. 1388) சிதம்பரம் கல்வெட்டில் இடம்பெறும் பேரம்பலத்தவரற்கு என்ன உறவு என்று தெரியவில்லை. இருவரும் குருநமசிவாயரின் சீடர்கள் என்பது மட்டும் உறுதியாகும். இங்குள்ள குருநமசிவாயர் எந்த நமசிவாயர்? சிதம்பரம் நகரில் நயினார் என்ற பட்டத்துடன் இன்றும் வன்னியர் சிலர் வாழ்ந்து வருகின்றனர். சான்றாக மருத்துவர் க. நடராசன் குடும்பத்தாரைக் குறிப்பிடலாம்.

கல்வெட்டில் இடம்பெறும் தெற்குத் தெரு இன்றுள்ள தெற்குத்தேர் வீதியாகும். தற்போதுள்ள மன்னார்குடி சாலையையொட்டியே மூன்றாம் வீதி மேல்துண்டம் சிறகு இருந்திருக்க வேண்டும். உடையார் பாளையம் அரசச்சின்ன நல்லப்பக் காலாட்கள் தோழர் என்பவர் குருநமசிவாயருக்கு நிலமளித்து ஆதரித்ததற்கு ஒரு செப்பேடு உண்டு. இம்மரபினரும் வன்னியரேயாவார். தற்போது சிதம்பரத்தில் கிடைத்த மடம் குறித்த கல்வெட்டிலும் வன்னியரே இடம் பெறுகின்றனர்.

இக்கல்வெட்டின் காலத்தில் திருவாவடுதுறை அதீன கர்த்தராக இருந்தவர் நமசிவாய தேசிகராவர். இவரே ஆதீன தாபகரும் ஆவர். இவருடைய சீடர்களில் அம்பலவாணரும் ஒருவர். இவர் ஆதீனத்தின் மூன்றாவது தேசிகராக இருந்துள்ளார். பல நூல்களை இயற்றியதுடன் நடராசப் பெருமானையும் போற்றி உள்ளார். கல்வெட்டில் வரும் பேர் அம்பலத்தவர் இந்த அம்பலவாணராக இருக்கலாமோ? திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடு ஒன்றில் நமசிவாய தேசிகர் 'குருநமசிவாயம்' என்று கூறப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. எனவே வீர சைவ மரபில் வந்த குருநமசிவாய சீடரையோ திருவாவடுதுறை ஆதினத்தின் நமசிவாய தேசிகரின் சீடர் அம்பலவாண தேசிகரையோ இக்கல்வெட்டுக் குறிக்கக் கூடும். இக்கல்வெட்டு கிடைத்த

மன்னார்குடி சாலையில் வன்னியர் மடம் ஒன்று உள்ளது. தற்போது புதுப்பிக்கும் நடந்து வருகிறது. மன்னார்குடிசாலைக்கு அருகில் கிழக்கில் மாலை கட்டித் தெருவில் திருவாவடுதுறை ஆதீனத்தின் கிளை மடமும் மடத்திற்குச் சொந்தமான மனைகளும் உள்ளன.

வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இக்கல்வெட்டு தொல்லியல் அலுவலகத்திற்குக் கொண்டுவந்து பாதுகாக்கப்படுகிறது. கல்வெட்டினைக் கண்டுபிடிப்பதிலும் கொண்டு வந்து சேர்ப்பதிலும் இக்கட்டுரையாசிரியருக்குத் தொல்லியல் துறை தட்டச்சர் இரா. கோபு, சிதம்பரம் மருத்துவர் க. நடராசன் ஆகியோர் ஒத்துழைப்பு நல்கினர்.

---

## எமக்கு வந்த இதழ்கள்



**உங்கள் பாரதி** – பாரதி இல்லம், 77, மூன்றாவது குறுக்குத் தெரு, பாரீஸ் நகர், மூலக்குளம், புதுச்சேரி – 605 010.

**செம்பருத்தி** – SEMPARUTHI PUBLICATIONS (SDN. BHD) Unit 2-6-8, MENARA KLH, BUSINESS CENTRE, No.2, JALAN KASIPILLAY, OFF2½ MILE, JALAN IPOH, 51200 KUALALUMPUR. MALAYSIA.

**இறக்கை**–முருகம்பாளையம், வாய்ப்பாடி (அ.நி) விஜயமங்கலம் (வழி) ஈரோடு–638 056.

**பயணம்**–PAYANAM PUBLISHERS, L56, KV TEMPLE STREET, SULTANPET, BANGALORE 560053.

**யாதும் ஊரே**–6/15, ஆனந்தன் தெரு, திருவள்ளுவர் நகர், பம்மல், சென்னை–600 075.

**சுருதகேவலி**–ஸ்ரீ சுருதகேவலி பத்ரபாகு சுவாமி சேவடல், ஸ்ரீ விசாக ஆசார்ய தபோ நிலையம், குந்த் குந்த் நகர்–604 505.

**முகம்**–எண்.10, 68–வது தெரு, 11–வது பிரிவு, கலைஞர் நகர், சென்னை–600 078.

**முங்காரி**–புலமைப்பண்ணை, சுகர்கேன்(அ.நி), கோவை–641 007.

**சமவெளி**–113, காமாட்சியம்மன் சன்னதித் தெரு, காஞ்சிபுரம்–631 502.

**இப்படிக்கு**–2, இளங்கோ தெரு, அய்யப்ப நகர், திருச்சி–620 021.

**உறங்காத உண்மை**–சாந்தோம் கலைத் தொடர்பு நிலையம், 150, லஸ்கோவில் சாலை, சென்னை–600 004.

**நடவு**– 269, காமராஜர் நகர், ஆலடி சாலை, விருத்தாசலம் – 606 001.

**ஏர்**–108, பாரதிவிடுதி, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–625 021.

**ஏழைதாசன்**–26, அடப்பன்வயல், 8ம் வீதி, புதுக்கோட்டை–622 002.

**கண்ணியம்**–30, கந்தசாமி சாலை, பெரியார் நகர், சென்னை–600 082.

**ஓம்சக்தி**–மாரியம்மாள் மகாலிங்கம் மன்றம், 69,ஆரோக்கியசாமி சாலை, R.S.புரம், கோவை–2

**வள்ளுவம்** – திருக்குறள் பண்பாட்டு ஆய்வு மையம், கவிதா நிலையம், 31, பணிபூண்டார் வீதி (திருமுதுகுன்றம்) விருத்தாசலம்–606 001.

**மூலிகைக்குழந்தை**–கார்த்திக் பதிப்பகம், எண்.1, 2–வது தெரு, அப்பாராவ் காலனி, சானிடோரியம், தாம்பரம், சென்னை–47.

**மள்ளர்மலர்**–10/2, நால்வர் நகர், பாரதியார் பல்கலைக்கழகம் (அ.நி.) கோவை–641 046.

**மருந்தில்லா உலகம்**–இந்தியா ஹவுஸ், 32, பள்ளிவாசல் தெரு, காரைக்குடி–630 001.

**உறவு**–அனுபமா, குருவப்பநாயக்கன்பாளையம் அரும்பாத்தபுரம் (B.O.) வில்லியனூர் (S.O.) பாண்டிச்சரி – 605 110.

**தன்முன்னேற்றம்**–நம்பிறப்புரிமை, பெரியார் தமிழ்ப்பேரவை, 1/425, தென்பெரும் நெடுஞ்சாலை, வண்டலூர் வாயில், சென்னை–600 048.



# முடுக்குப்பட்டி - பேரூர் விளக்குத்தூண் கல்வெட்டுகள்

- Er. லெ. சுபாஷ் சந்திரபோஸ்

திருச்சி மாவட்டம் கீழக்குறிச்சி அருகிலுள்ள முடுக்குப்பட்டிக் கிராமத்திலுள்ள வினாயகருக்கும், திருச்சி - குழுமணி சாலையில் அமைந்துள்ள பேரூர் கிராமத்திலுள்ள சப்த கண்ணியர் ஆலயத்திலுள்ள கலிக் கருப்பண்ணசுவாமிக்கும் கல் விளக்குத்தூண்கள் அமைத்த விவரம் கொண்ட கல்வெட்டுச் செய்திகள் கீழக்குறிச்சி கிராமத்தை சேர்ந்த படகார்த்திக்கரை கோப்புக் கிராமத்தை சேர்ந்த சோ.ம. தனபால் முத்தரையர் ஆகியோரின் உதவியுடன் இக்கட்டுரை ஆசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டது.

**முடுக்குப்பட்டி விளக்குத்தூண் கல்வெட்டு** (கிழக்கு முகமாக)

| | | |
|---|---|---|
| 1) உ ஸ்ரீ | 8) 20 தி | 15) கபலபே |
| 2) 1912 பி | 9) தா.க.மு.க. | 16) ர்களுன் |
| 3) பபரவரி | 10) ப.மகன் | 17) யதர்ம |
| 4) மீ உ க் | 11) விறன் | 18) கைங்க |
| 5) குவிறோ | 12) சாம்பா | 19) ரியம்செ |
| 6) திகிருது | 13) ன்கணே | 20) ய்யப்ப |
| 7) ஸ்ரீ தை மீ | 14) சருக்கா | 21) ட்டது |

**பேரூர் விளக்குத்தூண் கல்வெட்டு-1**
(தெற்கு முகமாக)

| | | |
|---|---|---|
| 1) உ – – | 6) ண்ன | 11) முத் |
| 2) சாமி | 7) ன்ம | 12) திறி |
| 3) துணை | 8) கன் | 13) யர் |
| 4) பேரி | 9) காத் | |
| 5) யஅ | 10) தான் | |

(கிழக்கு முகமாக)

| | | |
|---|---|---|
| 1) உ | 9) ஆடி மீ | 17) றாற்கல் |
| 2) கலிக் | 10) ய தி | 18) பலதர் |
| 3) கருப்ப | 11) பேரூர் | 19) [illegible] |
| 4) ண்னசு | 12) கலிக | 20) ாந்தல் |
| 5) வாமி | 13) ருப்ப | 21) கல்வி |
| 6) துணை | 14) ண்ன | 22) ளக்கு |
| 7) பிங்க | 15) சுவாமி | 23) உபை |
| 8) ள ஸ்ரீ | 16) க்கு ஊ | 24) யமம் |

(தொடர்ச்சி 32–ஆம் பக்கம் பார்க்க)



# புன்னார்குளம் சுமைதாங்கி நடுகல்

தே. கோபாலன், எம்.ஏ.,

கன்னியாகுமரி மாவட்டம் செம்பவளம் ஆய்வுத்தளத்தாரோடு உரையாடிக் கொண்டிருந்தபோது "கோயில்களைச் சார்ந்தே கல்வெட்டுக்களைத் தேடுகிறீர்களே! சமூகக் கல்வெட்டுக்களில் சமூகச் செய்திகள் மற்றும் பண்பாடு பற்றிய தகவல் கிடைக்க வாய்ப்பிருக்குமே" என்ற கருத்து வந்தது. கவனத்தில் கொள்ள வேண்டிய ஒன்று. இதனைத் தொடர்ந்து இம்மாவட்டத்தின் சாலையோரங்களில் பல சுமைதாங்கிக் கல்வெட்டுகளை இவ்வாய்வுத்தளத்தாரோடு சென்று படித்து ஆய்வு செய்ய இவ்வுரையாடல் வழிகோலியது.

அண்மைக் காலத்தில் சிறிய எண்ணிக்கை அளவிலே பார்க்கப்பட்ட இக்கல்வெட்டுகள் மூலமாக சமூக வரலாற்றுக்கு வரலாற்று ஆதாரங்களைத் தேடிச் செல்லும் ஆய்வாக இது அமைந்ததினை உணர முடிந்தது. இதற்கு எடுத்துக்காட்டாக குமரி மாவட்டத்தில் அகஸ்தீஸ்வரம் வட்டத்தில் மைலாடிக்கு அருகேயுள்ள புன்னார்குளம் கிராமத்தில் நிறுவப்பட்டுள்ள சுமைதாங்கிக் கல்வெட்டு அமைந்தது. இது அஞ்சு கிராமம், பொட்டல்குளம் செல்லும் சாலைகள் சந்திக்குமிடத்திற்கு வலப்புறமாக உள்ளது. கிபி.1823-ஆம் ஆண்டினை ஒட்டித் திருவிதாங்கூர் வரலாற்றுப் பின்னணிக்கு இக்கல்வெட்டு ஓர் ஆதாரமாக இருப்பதனைப் புரிந்து கொள்ள முடிந்தது.

பண்டைக் காலத்தில் வாகன வசதியின்மையால் தலைச் சுமையாகவே பொருள்களை வணிகர்களும், வழிநடைப் பயணிகளும் எடுத்துச் செல்வர். இவர்கள் செல்லும் பெருவழிப் பாதைகளில் தங்களின் தலைச்சுமையை இச்சுமைதாங்கிக் கற்களின் மீது இறக்கி வைத்துவிட்டுச் சற்று நேரம் இளைப்பாறிய பின் மீண்டும் பயணத்தைத் தொடங்குவர். இதுவே சுமைதாங்கிக் கல் தோற்றத்தின் அடிப்படைக் காரணமாகக் கொள்ளலாம். இச்சுமைதாங்கிகளுக்கு அருகே இளைப்பாறுவதற்கு வசதியாக மடமும், தாகசாந்திக்குக் கிணறும் வெட்டி அமைத்துள்ளனர். குமரி மாவட்டத்தில் கல்மடங்களுக்கு அருகில் சுமைதாங்கிக் கற்கள் முப்பந்தல், நாவல்காடு, நயினாப்புதுவூர் ஆகிய இடங்களில் இருந்துள்ளன.

கர்ப்பிணிப் பெண்கள் சுகப்பிரசவம் ஆவதற்கு இசக்கியம்மனின் ஓட்டுருவம் நேர்ச்சையாகச் செய்தளிக்கும் வழக்கம் குமரி மாவட்டத்தில் உள்ளது. இறந்துவிட்டால் அவர்களின் நினைவாக அன்னாரின் குடும்பத்தார் சுமைதாங்கிக்கல் நடும் வழக்கமும் உண்டு. வயிற்றுச் சுமையை இறக்கி வைக்காமல் இறந்துவிட்டதால் அச்சுமையினை இறக்கிவைக்கும் ஒரு நம்பிக்கையின் அடையாளமாகவும் இறந்தோரின் நினைவாகவும் அச்சுமைதாங்கிக்கல் நிறுவப்படுகிறது எனக்கருதலாம். கன்னியாகுமரி மாவட்டம், கல்குளம் வட்டம், மருந்துக்கோட்டை கிராமத்தில்

சாலையோரத்திலுள்ள ஒரு சுமைதாங்கிக் கல்லில் **"ஸ்ரீ ராஜராஜேஸ்வரி சகாயம்"** என மலையாளத்தில் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ ராஜராஜேஸ்வரி என்பவர் இச்சுமைதாங்கியினை உபயமளித்திருக்கலாம். இதில் ஆண்டு வேறு விவரம் ஏதும் குறிப்பிடப்படவில்லை. இச்சுமைதாங்கிக்கல் ஓர் ஆலமரத்தின் அடியில் நிறுவப்பட்டுள்ளது.



தோவாளை வட்டம் புத்தேரியிலிருந்து இறச்சகுளத்திற்கு செல்லும் சாலையின் வலப்புறமாகக் கள்ளர் மடத்திற்கு முன்பாக ஒரு சுமைதாங்கிக்கல் உள்ளது. இதன் ஒரு வரிக்கல்லில் கொல்லம் 1048 (கி.பி. 1873) இல் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. **"புத்தேரி சங்குபிள்ளை ராமலெச்சிமி தர்மம்"** எனக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. இதன் நேர் பொருளாகச் சங்குபிள்ளை ராமலெச்சிமி தம்பதியினர் இச்சுமைதாங்கியினைத் தர்மமாக நிறுவியுள்ளனர் எனக் கொள்ளவேண்டியுள்ளது. இதன் மறு விளக்கமாக ராமலெச்சிமி என்ற கர்ப்பிணிப் பெண் அகால மரணமடைந்ததின் நினைவாக அன்னாரின் கணவர் சங்குப்பிள்ளை இதனை நிறுவியிருக்கலாம்.

புத்தேரி அரசு உயர்நிலைப்பள்ளி அருகிலுள்ள மற்றொரு சுமைதாங்கிக் கல்வெட்டு கொல்லம் 1042 (கி.பி. 1867) இல் பொறிக்கப்பட்டுள்ளது. மாதேவன்பிள்ளை என்பவர் தனது கர்ப்பிணி மனைவி லட்சுமி என்பவர் அகால மரணமடைந்ததன் நினைவாகத் தர்மமாக இச்சுமைதாங்கியினை நட்டுள்ளார் எனத் தெரியவருகிறது. இச்சுமைதாங்கியின் மற்றொரு வரிக்கல்லில் வேல்சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ள வரிக்கல்லில் மஞ்சள் பூசி வழிபடுவதாகத் தெரிகிறது.

அகால மரணமடைந்த கர்ப்பிணிப் பெண்களைப் போலவே அகால மரணடைந்த ஆண்களுக்கும் சுமைதாங்கிக்கல் நடும் பழக்கம் இருந்தது என்பதை புன்னார்குளம் கல்வெட்டும், கோட்டாறு ஏகாலியர் ஊர்வகை மடக் கல்வெட்டும் சான்று பகர்கின்றன. எனவே வழிநடைப் பயணிகளுக்கு உதவும் நோக்கத்தில் அமைக்கப்படும் இச்சுமைதாங்கிக் கற்களை ஊரார், அல்லது ஆட்சியாளர் அல்லது செல்வந்தர் அமைத்துக் கொடுத்திருக்கலாம். அதுவே சமூக நம்பிக்கையின் அடிப்படையில் அகால மரணடைந்தோரை நிலை நிறுத்த / நினைவாக அக்குடும்பத்தினர் சுமைதாங்கிக் கல் நடும் மரபு இணைந்திருக்கலாம்.

அத்தகைய அகால மரணமடைந்த ஆவி (ஆவி உலவும் கல்லாக நம்பப் படுவதால் அந்நிலப் பகுதியை விலைக்கு வாங்கத் தயங்குவர்) களால் தீங்கு விளைகிறது என மக்கள் அஞ்சும்போது அச்சுமைதாங்கிக் கற்களில் மஞ்சளைப் பூசி இசக்கியாகவும், மாடனாகவும் வழிபடும் நிலை ஏற்படுகிறது.

இவ்வழிபாடு முதலில் இறந்தோரின் குடும்ப நிலையிலும், பின்பு இறந்தோர் சார்ந்த சாதி நிலையிலும், அதன்பிறகு ஊர் நிலையிலும், இறுதியாக மாடன் அல்லது இசக்கியுடன் இணைத்துச் சுமைதாங்கி மாடன் என்றும், சுமைதாங்கி இசக்கி என்றும் வளர்ச்சியுறுகிறது. குமரி மாவட்டத்தில் இம்மாதிரியான வழிபடப்படும் சுமைதாங்கிக் கற்களை நாகர்கோவில், புத்தேரி, வடிவீசுவரம், வடிவீசுவரத்திலுள்ள சுமைதாங்கி மாடன் கோயிலுக்குத் தெற்கே உள்ள தெரு 'சுமைதாங்கித் தெரு' என்றே அழைக்கப்படுகிறது. பட்டகசாலியன்விளை முதலிய பல இடங்களில் காணலாம்.

புன்னார்குளம் சுமைதாங்கிக்கல் இராணுவத்தில் பணிபுரிந்து இறந்த ஆண் வீரர் ஒருவருக்காக நிறுவப்பட்டுள்ளமை, அதில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டின் மூலம் தெரியவருகிறது. எனவே, இது நடுகல்லின் மறுவடிவமாக அமைகிறது. இறந்த ஆணுக்காக நிறுவப்படும் சுமைதாங்கிக் கல்லினை 'ஏமக்கால்' என அகஸ்தீஸ்வரம் வட்டத்தில் இளையநயினார்குளம் என்ற ஊரில் கொல்லம் 1086 (கி.பி. 1911) இல் பொறிக்கப்பட்ட சுமைதாங்கிக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது.

**புன்னார்குளம் கல்வெட்டு**

1) ள யஅ (998)
2) மார்கழி மாதம்
3) ൧௬ (16) சுக்குரவார
4) த்தில் பின்னாகு
5) ளம் காட்டில்
6) மலையாம் ரெண்டா
7) ம் பட்டாளத்தி
8) ல் முந்திய கும்பி
9) ணியில் அமெ (ரர்)
10) இரணியல் ராமன்
11) பிள்ளைக்கு வே
12) லாயுதம் துணை

இரணியல் ஊரைச் சேர்ந்த ராமன்பிள்ளை என்பவர் புன்னார் குளத்திலிருந்த மலையாம் பட்டாளத்தில் பணிபுரிந்து மரணமடைந்தார் என்பதே இக்கல்வெட்டுச் செய்தி. தற்போதைய புன்னார்குளம் இக்கல்வெட்டில் பின்னாகுளம் என அறியப்படுகிறது.

கல்வெட்டின் 998-க்கு நேரான ஆண்டு கி.பி. 1823. இக்காலத்தில் திருவிதாங்கூர் ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர் இராணி கௌரி பார்வதிபாயி (கி.பி. 1815-1829) திருவிதாங்கூர் ஆங்கிலேயக் கும்பினியப் பிரதிநிதி (Resident) ஆகக் கர்னல் மன்றோ அக்காலக்கட்டத்தில் இருந்தார். தளவாய் வேலுத்தம்பியின் புரட்சிக்குப்பின் (கி.பி. 1809) திருவிதாங்கூர்ப் படை ஆங்கிலேயர்களால் முற்றிலுமாக ஒழிக்கப்பட்டது. இதற்குப் பின்பு கி.பி. 1819-இல் இராணி கௌரி பார்வதி பாயி கர்னர் மன்றோ மூலமாக 2100 துப்பாக்கி ஏந்திய வீரர்களையும், 50 குதிரைப் படை வீரர்களையும் கொண்ட இரண்டாவது நாயர் பட்டாளம் ஒன்று அமைக்கப்பட்டது. இதற்கு நாயர் பிரிகேடு (Nayar Brigade) என்ற பெயர் கி.பி. 1830 இல் அதிகாரபூர்வமாக வழங்கப்பட்டது. ஆனால் இதற்கு முன்பே மக்கள் வழக்கில் 'மலையாம் பட்டாளம்' என வழங்கப்பட்டது என்ற விவரம் இக்கல்வெட்டின் மூலம் நமக்குத் தெரிய வருகிறது. எனவே, இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் ராமன்பிள்ளை இப்படைப் பிரிவில் பணியாற்றி அகால மரணமடைந்திருக்கலாம்.

இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ள வரிக்கல்லின் இன்னொரு பக்கத்தில் வேல் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. இதேபோல் புத்தேரி, கோட்டாறு ஆகிய இடங்களிலுள்ள சுமைதாங்கிகளிலும் வேல் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது. இராணுவத்தில் பணிபுரிந்து மரணமடைந்த வீரனுக்காக நிறுவப்பட்டதால் புன்னார்குளம் சுமைதாங்கிக்கல் நடுகல்லின் மறுவடிவமாக அமைகிறது.

தளவாய் வேலுத்தம்பியின் புரட்சி ஒடுக்கப்பட்ட பின்னர் ஆங்கிலேயக் கும்பினியர்களால் ஒழிக்கப்பட்ட மலையாம் பட்டாளத்தை கர்னல் மன்றோ மூலம் மீள அமைத்தற்கான சான்றாக இக்கல்வெட்டு விளங்குகிறது.

அதிகாரபூர்வமாக 'நாயர் பட்டாளம்' என்ற பெயர் வழங்கப்படுவதற்கு முன்பே மக்கள் வழக்கில் மலையாம் பட்டாளம் என வழங்கப்பட்ட விவரமும் இக்கல்வெட்டின் மூலம் நமக்குத் தெரிய வருகிறது.

வேல் சின்னம் பொறிக்கப்பட்டு குமரன் துணை என்றும் வேலாயுதம் துணை என்றும் முறையே கோட்டார் சுமைதாங்கிக் கல்வெட்டும், புன்னார்குளம் சுமைதாங்கிக் கல்வெட்டும் முடிவதால் இவ்விரண்டும், இதனோடு வேல் சின்னம் பொறிக்கப்பட்ட புத்தேரி சுமைதாங்கியும் ஒப்புநோக்கத்தக்கன.

**துணை நூல்**

Travancore State Manual, V. Nagam Aiya, 1995, Vol, I , 477 / 478.

**தகவலாளர்**

**1) திரு. செந்தீ. நடராசன், செம்பவளம் ஆய்வுத்தளம், நாகர்கோவில்.**

**2) முனைவர். அ.கா. பெருமாள், அறிஞர் அண்ணா கல்லூரி, ஆரல்வாய்மொழி.**

**3) திரு. செல்வின், நாகர்கோவில் இவருடன் இணைந்து இவ்வாசிரியரால் புத்தேரி சுமைதாங்கிக் கற்கள் கண்டறியப்பட்டன.**

**தொழிலதிபர் திருமிகு. கே.ஜனார்தனன் அவர்களுக்கு நன்றி!**

**FLOWLINE ACCESSORIES (சென்னை) தொழிலகத்தின் உரிமையாளரும், பழங்காசின் ஆர்வலருமான திருமிகு. கே. ஜனார்தனன் அவர்கள் ப்ழங்காசின் வளர்ச்சி நிதியாக ரூபாய் 1000/–ஐ நன்கொடையாக அளித்துள்ளார்.**

**அன்னாரின் கடிதத்தில், "தமிழ்நாட்டின் பண்டைய வரலாற்றைப் 'பழங்காசு' என்னும் காலாண்டு இதழ் மூலமாக தமிழினம் உணரப் பாடுபட்டுக் கொண்டிருக்கும் தங்களின் முயற்சி வெற்றி பெற வாழ்த்துக்கள்" என்று வாழ்த்தியுள்ளார். அவருக்குப் பழங்காசு தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.**



# புதுக்கோட்டை மாவட்ட ஓலைச் சுவடிப் பட்டயம்

- இரா. திருமலைநம்பி

புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், கொன்னையூர் கிராமம், தச்சம் பட்டியிலிருக்கும், திரு. பழ. சிவம்பரம் அம்பலம் அவர்களிடமுள்ள ஓலைச் சுவடிப் பட்டயம். இவரிடம் பல சுவடிகள் உள்ளன. அவற்றில் 8 சுவடிகள் மட்டும் வரலாற்றுக்குப் பயன்படும் வகையில் உள்ளன. அவை தொடராகப் "பழங்காசு" இதழில் வெளிவரும்.

*கோயில் குருக்கள் (பிராமணன்) மகன்கள் பண்டாரம் ஆனது கி.பி.1498*

**முன்பக்கம்**

1. சுபஷத்திரி மண் மகா மண்டலீஸ்வரன் சீரங்கராயர் பிரிதீவு ராச்சிய பாரம் பண்ணி அருளா நின்ற சாலிய வாகன சகார்த்தம் ௲௪௱௨௰ (1420) க்கு மேல் செல்லா
2. நின்ற ருத்தராகாரி ௴ வைகாசி மீ ௨௰௭ (27) உ தண்ணூர் தேனிமலை குருக்கமார் பரமேஸ்பர்க் குருக்கள், சந்திரசேகரப் பட்டர், சுப்பிரமணிய
3. குருக்கள், நயினாப்பட்டர், நாலுவகைப் பேரும், வயல், நில காணி அன்னான் சிவந்திவேளா ருக்குட்பட்ட வேளாரையும், கொண்ணையூர், பொன்னக்கோன், பெரியார்க்கோ
4. ன் வகையரா, வேடன் வகையும், வலை பிறன் உள்ளிட்டார் மூன்று வகையாரும், தேனிமலைப் பிள்ளையார்கோவில் சன்னதியிலிருந்து கொண்டு, பரமேஸ்வர குரு
5. க்களுக்குப் பிரந்த, மாரி பண்டாரம், வீர பண்டாரம் ரெண்டு வகைப் பேருக்கும் காணியாச்சி பட்டயம் கொடுத்த பட்டயமாவது யெங்கள் நாலு

**பின்பக்கம்**

1. வகைப் பேர் பொதுக் காணி, கொண்ணையூர் முத்துமாரியம்மன் கோவில் பூசை பண்ணிக் கொண்டு பூசைப்பத்து நிலம் கொன்னைக் கண்மாயி பிர
2. கரையில் வயித்தமும் தொட்டன் ஊரணிக்கு வடக்கு புஞ்சை விதையடி முக்கலமும் நாங்கள் நாலு பேரும், வேடரும், பூசைப் பத்து நிலம், புஞ்சையும் ஆண்டு
3. வந்தபடிக்கி நாங்கள் ரெண்டு பேரும் யெங்கல் (மத்தியில் பிறந்து இருக்கிற படியினாலே, என்னென்னைக்கும், கல்லும், புல்லும்
4. பூமியும் உள்ளவரைக்கும் மகமகனாக ஆண்டு கொள்வீராகவும், இந்தப் படிக்கி பரமேஸ்பர குருக்கள் சந்திரசேகரப்பட்டர்
5. சுப்பிரமணிய குருக்கள், நயின குரு பட்டர், நாலுவகைப் பேரும் மன சந்தோஷமாக சொல்ல இந்தப் பட்டயம் எழுதினது மரிங்கி.

**விளக்கம்**

செம்பூதி ஊராட்சியில் தேனூர் சிறு குடியிருப்பாகும். இது புதுக்கோட்டை பொன்னமராவதி (வழி) காரையூர் சாலையில் உள்ளது. தேனூர் மலை எனப் பழமையான கல்வெட்டுக் கூறுகிறது. செம்பூதி என்ற

பெயர் இளங்கோவதி முத்தரைய மன்னனின் பட்டப் பெயரால் ஏற்பட்டதாகும். இவனால் (கி.பி. 630-660) அமரூன்றி முத்தரையன் குடைவிக்கப்பட்ட பூவாளைக்குடி புஷ்பவனேஸ்வரர் குகைக்கோயிலும் அருகாமையிலேயே உள்ளது.

சிறுகுன்றுமலை, உச்சியில் சுப்பிரமணியர் கோவில், மிக ரம்மியமான சூழ்நிலை சுற்றுலாத் தகுதி பெற்ற இடம். "மலையத்து வஜன்" தவமிருந்த இடம். இக்கோயிலில்தான் மேற்கண்ட பட்டர்கள் பூசைக் குருக்களாக இருந்துள்ளனர். உவச்சர் குலத்துப் பெண் கோவிலில் பணிப்பெண். இவர்களுக்குள் தொடர்பு ஏற்பட்டுப் பிறந்தவர்கள்தான் மாரி, வீரன் என்ற மகன்கள்.

இனக் கலப்பில் பிறந்த மகன்களை, கோனார் (யாதவர்) வேடன், வலையன் (முத்தரையர்) சபையின் முன்பு, தங்களுக்குப் பிறந்தவர்கள் தான் என்று ஏற்றுக்கொண்ட பட்டர் குருக்கள், கொன்னையூர் முத்து மாரியம்மன் கோவிலில் பூசை செய்து வரும்படியும், தங்களுக்கு அளித்த கோவில் நிலங்களை அவர்களுக்கு விட்டுக் கொடுத்து, மாரி பண்டாரம் வீர பண்டாரம் என வகைப்படுத்திப் பட்டயம் கொடுத்துள்ளனர். இந்தப் பண்டார வாரிசினர் இன்றும் இங்கு வாழ்கின்றனர். கலப்பு மணத்தில் பிறந்த மகன்களைத் தந்தை குலத்தில் சேர்க்காவிட்டாலும், மனச்சாட்சிக்கு ஒப்புக்கொண்டு, மகன்கள் தான் என்பதை சபை முன்பு அறிவித்து, உரிமைகளை வழங்கிய நேர்மை பாராட்டுக்குரிய வரலாற்று நிகழ்வாகும்.

❀ ❀ ❀

சிவகங்கை மாவட்டம் காரைக்குடி வட்டம், நாட்டுச்சேரி ஊராட்சி, அப்பலைக் கிராமம், திரு. தி. இராமநாதன் அவர்களிடமுள்ள

**மூக்கறைக்காளி, அய்யனார்கோவில்,**
**குளத்து மீன், காளாஞ்சி ஓலை முரி**

1. உ சிவமயம். நந்தநா ஞு மாசி மீ ω (10) றாமனாதபுரம் ஜில்லா எமுவங்கோட்ட தாலுகா (தற்சமயம் கணக்கடி தாலுகா) அப்பலை கிராமத்தில் கோவில் க(ாளாஞ்சி)

2. தகறால் யேர்ப்பட்டதால் பஞ்சாயத்தார்கல்(ள்) அண்டக்குடி வீர. பெரியசாமி சேர்வை க (1) குருங்களூர் செந்திவேல் (செட்டியார்)

3. ர் உ (2) செப்பாவயல் காருவாரி வீரப்பன் சேருவை காரர் ௩(3) சின்னவீர மங்கலம் சுப்பதேவர் ௪ (4) மொலம்பூர் கைலாச (தேவன்) ரு (5)

4. இந்த ரு (5) அய்ந்த பேர்கலு (ளு) ம் பஞ்சாயத்து தீர்மானப்படி ஊறார் ஒப்புக்கொண்டோம் என்னவென்றால் ஷி கிராமத்தில் (கோ)

5. வில் முதலாவது அரமனைக் காலாஞ்சியும் உ (2) கணக்கப்பிள்ளை காளாஞ்சியும் ௩(3) சு. தில்லியப்பன் சேர்வை வகை...

6. சின்நான் கோன் வகையரா காலாஞ்சியும் ரு (5) வது ஊறார் காலாஞ்யும் ஷி

**பின்பக்கம்**

1. ஷி கம்மாய் கால்வாய், அடைப்பதற்கும், வீதம் போய் அடைக்கிறது. கம்மாய் மீனில் மறியாதை (மு)

2. தலாவது அரமனைக்கு உ (2)வது கணக்கப்பில்லைக்கி, ௩(3) வது சு. தில்லியப்பன் வகையறாவுக்கு ௪ (4) சின்நான் கோ (ன் வகை)

3. யறாவுக்கும் ௫ (5) வது அலை ஒலை ஊணுகிற நாடாவிக்கு க (1) பாளை மீன் பல்லனுக்க, குலி (ழி) மீன் பரயனுக்கு கலந்து...

4. க(1) பாக்கி மீன்களை குடிதவறாமல் பங்கு வீதம் குடுத்தது போக மீத மீன்களை குடிகள் னோக்கம்போல் சிலவு...

5. (சில்) லரை சிலவுகள் ஷெி வரி, வாய்வா, கடிப்படி செலுத்தி வரவேண்டியது. இந்த முரியில் உள்ள சாச்சிகல் (ள்) அ...

6. வீர. பெரியசாமி சேர்வை அரிவேன். செப்பாவயல் காருவாரி வீரப்பன் அரிவேன்

**2வது ஏடு முன்பக்கம் மட்டும்**

1. சின்ன வீரமங்கலம் சுப்பதேவர் அரிவேன்
2. கருங்களூர் செந்திவேல் செட்டியார் அரிவேன்
3. மூலம்பூர் கைலாச தேவன் அரிவேன்

இதுக்கு ஷியூர் அப்பலை
இந்தக் கீரல் சானார கருங்கன்
இந்தக் கீரல் எடச்சி சின்னப்பயல்
முல்லியாவயல் உருமாறாவுத்தர்
அறிவேன். சாட்சி

இந்த உடன்படிப்கை (எழுதியது)
மி, சாச்சியுமான இந்த . . .
சாமினாதய்யர் வசம் . .

**விளக்கம்**

இந்தச் சுவடியில் ஆங்கில ஆண்டை அறிய முடியவில்லை. தமிழாண்டு நந்தன மட்டும் உள்ளது. எனினும் 200 ஆண்டுகளுக்கு முந்திய வாயிருக்கலாம். அப்போது எழுவங்கோட்டை தாலுகாவாக இருந்துள்ளது. தற்போது தாலுகா தலைமையிடம் மாறியுள்ளது.

குளம், வாய்க்கால், நீர்ப் பராமரிப்புக் குடிகளே செய்ததையும், அதற்காக மீன்களை பங்கிட்டுக் கொடுத்ததையும் குடிகள் தவறாமல் வரி செலுத்தி வந்ததையும் அறியலாம். குடிகளின் கடமை, குறிப்பாக அணையால் உடைப்பு ஏற்படாதிருக்க நாடார் அலை ஓலை ஊன்றி நடுதல், வாய்க்கால் வெட்டுதல், நீர் தேக்கிக் குளத்தைப் பெருக்குதல், அரசருக்கும், அரசு அலுவலருக்கும் முதல் இரண்டாவது காளாஞ்சி மரியாதைகள், பானையில் மீன் கொடுத்தல், குழியில் சேமித்த மீனில் பங்குபோக மீதம் குழியில் போட்டு வழங்குவது முதலிய பழக்க, வழக்க முறைகளை இந்த ஒலை முரி மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

**நகல் எடுத்து எழுதியது**

இரா. திருமலை நம்பி ஆணையர் (ஒய்வு)



(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# இராஜராஜர் யார்?

- முனைவர், டாக்டர் இரா. கலைக்கோவன்

அடுகளத்தின் பின்னால் சரியான இடைவெளிவிட்டு வரிசையாகக் குத்துவிளக்குகள். இந்நாளைய விளக்குகள் போலவே வடிவமைப்பு கொண்டுள்ள இவற்றின் தண்டுப்பகுதியில் சாரணர்கள் போடும் ரீஃப் முடிச்சுபோலப் பட்டுத்துணியால் முடிந்துள்ளனர். இவ்விளக்குகள் அடுகளத்திற்கு ஒளியூட்டினபோலும். இவற்றுக்கிடையே சந்தனக்கிண்ணம் போன்றவையும், முக்காலியின் மீதிட்ட பாத்திரங்களும் உள்ளன.

இச்சமையற்கூடத்திற்கு நேர் மேலே திருமண அரங்கில் உபானம், தாமரை வரிகளுக்கிடையிலமைந்த உருள் குமுதம், வாஜனம் ஆகிய உறுப்புகள் கொண்டு உருவான தெற்றியொன்றின்மீது முதல் வரிசையில் அறுவரும், அவர்களுக்குப் பின்வரிசையில் எழுவருமாக விருந்தினர்கள் அமர்ந்தள்ளனர். இவர்கள் அமர்ந்துள்ள தெற்றியின் விதானம் பதக்கவரிகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இவ்வரிகளிடையே மயில்வரி, இறக்கைகளைச் சிறகடித்தபடி ஒவ்வொரு மயிலும் ஒன்றுபோல இடப்புறப் பார்வையாய்க் கழுத்தைத் திருப்பியுள்ளன.

விருந்தினர் அனைவரும் முப்புரிநூல் அணிந்துள்ளனர். முதல் வரிசையில் இருவர், இரண்டாமவரும் ஆறாமவரும், பழுத்த வேதியர்களாய், வெண்தாடி வேந்தர்களாய்ச் சடைமுடிந்த தலையினராய்க் காட்சியளிக்கின்றனர். இவ்வேதியர்க்கு இடையிலமர்ந்துள்ள மூவரில் இருவர் தம் வலக்கையை வியப்பு முத்திரையில் விரித்தபடியிருக்க, மற்றொருவர் தம் இரு கைகளையுமே வியப்புக் குறிகாட்டி விரித்துள்ளார். இருவர்க்குக் கொண்டையுள்ளது. இருவர் தலையலங்காரம் விளக்குமாறு இல்லை. அனைவருமே வியப்பும் திகைப்பும் சூழ, விரிந்த விழிகளுடன் நடப்பதொன்றும் விளங்காதார் போல் அமர்ந்துள்ளனர். இவர்தம் இடையாடை அடுகள ஆடவராடையமைப்பை ஒத்தமைந்துள்ளது. இரு கால்களையும் அரைச் சம்மணத்தில் குறுக்கு செய்து இவர்கள் அமர்ந்திருக்கும் அமர்வுமுறை சோழர்காலத்துப் பெருவழக்காயிருந்த அமர்வு முறைபோலும். பல்லவர் காலச் சிற்பங்களிலோ, ஓவியங்களிலோ இத்தக அமர்வுமுறையைக் காணமுடியவில்லை. நிற்பவர்களுள்ளும் இளைஞரும், முதிர்ந்தவரும் உள்ளனர். சிலர் நரைத்த தலையும், வெண் தாடியுமாய் விளங்க, சிலர் கருத்த கொண்டையராய்க் காட்சி தருகின்றனர். ஒருவர் தலையிலும் கழுத்திலும் ருத்திராக்கமாலை. இவர்களுள் சிலர் தம் கண்முன் நிகழும் நிகழ்ச்சியின் விளைவுகளைப் பார்வைப் பரிமாற்றம் செய்துகொள்ள, ஒருவர் மட்டும் ஓங்கிய கையராய் நிற்கிறார்.

இவர்தம் உணர்வுக் கொந்தளிப்பிற்குக் காரணமானவரையும், அவர்தேடிவந்த மாப்பிள்ளை சுந்தரரையும் நாயக்கக் கைகள்

சிதைத்திருந்தாலும் வந்தவரின் குடையும் தலைப்பகுதியும் சுந்தரரின் எஞ்சிய தோற்றமும் அடையாளம் காட்டிவிடுகின்றன. நரைத்துத் தொங்கும் தலைமுடியைக் கொண்டையாய் முடிந்து, பழுத்த பழமாய், முப்புரிநூல்போல மார்பில் துணியணிந்து, வலக்கையில் ஓலையும் இடக்கையில் குடையும் கொண்டு இடுப்பில் கீளுடையும் முகத்தில் மீசையும் தாடியுமாய்த் தொங்கு செவிவியராய்க் கண்களில் குறும்பும் கொண்டு சுந்தரர் முன், 'அடிமை நீ ஆவணம் இதோ' என்றறிவிப்புச் செய்து, எஜமானப் பொலிவுடன் நிற்கும் சிவபெருமானை, அடுத்துள்ள வழக்கம்பலக் காட்சி கொண்டே இங்கு வர்ணிக்க முடிந்துள்ளது. நிகழ்ச்சிகளைச் சேக்கிழார் தொடுக்கிறார்.

நாவலூரரார் சுந்தரரின் எதிரில் வந்துநின்ற சிவபெருமான், மணவரங்கில் கூடியிருந்தோரைப் பார்த்து, 'நாவலூரரான் என் அடிமை' என்றார். அந்தணர் நகைத்தனர். சுந்தரரும்தான். 'நண்பனே ஏன் நகைக்கிறாய், இதோ உன் பாட்டன் அந்நாளில் எழுதித்தந்த முறியோலை' என்று ஆவணம் காட்டிச் சுந்தரரின் நகைச்சினம் அடக்க முயன்றார் இறைவன். 'அந்தணர் மற்றோர் அந்தணர்க்கு அடிமையாவதா! நீ பித்தனா? சினமடங்காத சுந்தரர் ஏகவசனத்தில் இறங்கி, 'எங்கே அவ்வோலையைக் காட்டுக' என்றார். 'முறியோலையைப் பெரியவர்கள் பார்க்கட்டும் நீ எனக்குத் தொண்டு செய்யப் புறப்படு,' என்றார் இறைவன். அவ்வளவில் பெருஞ்சினம் பொங்கத் தாவிய சுந்தரர் சிவபெருமான் கையிலிருந்த ஓலையைப் பற்றிப் பறித்துக் கிழித்தெறிந்தார். அரங்லிருந்தோர் சுந்தரரின் முறையற்ற செயலால் வருந்தினர். மேற்கொண்டு ஏதும் நடவாதவாறு நாவலூரரைத் தடுத்தனர். சிவபெருமானை நோக்கி அவர் இருப்பிடம் வினவினர். 'வெண்ணெய்நல்லூர் என் இடம் முறையன்றி என் ஓலை கிழித்ததனால் இவன் என் அடிமை என்பதை மெய்ப்பித்தான்' எனச் சிரித்தார் சிவபெருமான். 'வெண்ணெய்நல்லூர் உம் இடமா? அங்ஙனமாயின் அங்கேயே வழக்கிடுக', என்ற சுந்தரரிடம் 'வெண்ணெய்நல்லூர் அந்தணர் அறக்களத்தில் என்னிடமுள்ள மூலவோலை காட்டி உன் அடிமை நிலை மெய்ப்பிப்பேன்' எனச் சூளுரைத்த முதியவர் புத்தூரிலிருந்து வெண்ணெய்நல்லூர் விரைந்தார்.

இராஜராஜரின் ஓவியங்கள் வரைந்த திருமண அரங்கு நாயக்கக் கைகளில் சிதைந்துபோனதால், சிவபெருமான், சுந்தரர் உணர்வலைகளைப் புரிந்துகொள்ளவோ, அவை குறித்த கற்பனைகள் வளர்க்கவோ வழியில்லாது போய்விட்டது. நல்லவேளையாக விருந்தினர்களின் பார்வைகள் தப்பிப் பிழைத்தன. அதனால் நாயகர் இருவரின் உரைவளர்த்து உச்சமான நிலையை, இந்தப் பார்வைப் பின்னல்கள் கொண்டும், வியப்பில் விரிந்திருக்கும் அவர்தம் முகக் குறிப்புகள் கொண்டும் சேக்கிழாரின் பின்னணியில் சிந்தித்து அறிதல் இயல்வதாகிறது.

வெண்ணெய்நல்லூர் வழக்மன்றம் மூன்றாம் பகுதியாக விரிகிறது. சோழர்காலத்து வழக்காடுமன்றுகள் எப்படியிருந்தன, வழக்கு ஆங்கு எப்படி நிகழ்த்தப்பட்டது. அறக்கள அந்தணர் எப்படியிருந்தார் என்பதற்கெல்லாம்

விடையிறுக்குமாறு இவ்வோவியம் தீட்டப்பெற்றிருப்பது இதன் சிறப்பாகும்.

செஞ்சாந்து பூசிய தரையிலிருந்து எழும் எழிலார்ந்த தூண்களால் தாங்கப்படும் கூரையோடமைந்த இம்மன்றின் கபோதம், ஐந்து கூடு விளைவுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. கபோதத்தின் இரு மூலைகளிலும் வள்ளிமண்டலமும், விளிம்பில் சந்திரமண்டலமும் விளங்கப் பேரளவினவாய்க் காட்டப்பட்டிருக்கும் கூடுகளுள் ஒன்றில் கோயில் காட்சி தருகிறது. கபோதத்தின் மேல் வேழயாளிகளும் சிம்மயாளிகளும் கூடிய பூமிதேசம். வழக்குமன்றின் உட்புறத்தே ஓரத்தில் நான்முக அரைத் தூண்கள். அவற்றின் பின் வரிசையாக ஆறு தூண்கள். அவற்றுள் இடப்புறத்தூண் மட்டுமே ஓரளவிற்குத் தெரிகிறது. பிறவற்றின் கும்பம், தாமரை, பலகை ஆகிய உறுப்புகள் மட்டுமே பார்வைக்குக் கிடைக்குமாறு ஓவியம் சிதைந்துள்ளது. ஆங்காங்கே மாலைகள் நாலவிடப்பட்டுள்ள இம்மன்றில், வழக்காடுபவர்கள் நிற்க, விசாரிப்பவர்கள் சிலர் அமர்ந்தள்ளனர். சிலர் நின்றபடி ஓலை ஆய்வில் ஈடுபட்டுள்ளனர்.

மன்றின் வலப்புறம் நிற்கும் சுந்தரரின் இடப்புறம் ஒருவரும் வலப்புறம் இருவரும் அமர்ந்துள்ளனர். கால்களைக் குறுக்கீடு செய்து அரைச் சம்மணத்தில் அமர்ந்திருக்கும் அவர்களுள் நடுவிலிருப்பவர் பழுத்த பழமாய், நரைத்த தலைமுடியும் நீண்டு வளர்ந்த வெண்தாடியுமாய்க் காட்சி தருகிறார். முடிந்த கொண்டையின் பெருமை அவரது தலைமுடி நீளத்திற்குச் சான்றாகிறது. வழக்குரைக்க வந்திருக்கும் வயோதிகரைப் பார்த்துப் பேசுமாறுபோலத் திறந்த இதழ்களும், மேல் நோக்கிய பார்வையுமாய்த் தலையை அண்ணாந்து அமர்ந்திருக்கும் பெரியவரின் மேல்நோக்கிய இடக்கை ஓலையொன்றைப் பிடித்திருக்க, வலக்கை வியப்பு முத்திரையில் விரிந்துள்ளது. பெரியவரின் முன்னும் பின்னும் அமர்ந்திருக்கும் இளையவர்களுள் பின்னாலிருப்பவர் ஏதோ கூற வாயெடுக்க, முதலாமவர் வழக்குரைக்க வந்திருக்கும் வயோதிகர் நீட்டும் ஓலையைத் தம் இடக்கையை மேலுயர்த்திப் பற்றுகிறார். வலக்கை வியப்பு காட்டுகிறது. இம்மூவருமே துணியை முப்புரிநூலென அணிந்துள்ளனர். இவர்தம் வலமேற்கையின் கீழ் மார்பின் பக்கப் பகுதியோடு பொருந்திய சுவடிக் கட்டுகள்.

வழக்குரைஞரின் இடப்புறம் மூவர் அரைச் சம்மணத்தில் அமர்ந்துள்ளனர். நால்வர் நிற்கின்றனர். அமர்ந்திருக்கும் இளையவருள் நடுவிலிருப்பவர் ஏதோ கூறக் கருதியவர்போல், வலக்கையை மார்பருகே நிறுத்தி இடக்கையை வலப்புறமாய் நீட்டி, உணர்வலைகள் முகத்தில் பொங்கக் காட்சி தருகிறார். அவரின் இருபுறத்தும் அமர்ந்திருப்பவர்களுள், வலப்புறத்தார் விழிகளை அகல விரித்துப் பெருந்திகைப்போடு நடுவிலுள்ளவரை நோக்க, இடப்புறத்தார் நடக்கும் வழக்கில் தம்மையிழந்து மெய்மறந்தாராய்க் கண்கொட்டாது பார்க்கிறார். துணியை முப்புரிநூலென அணிந்த இம்மூவரில், இருவர் நெற்றியில் திருநீறு இம்மூவரில் யாருக்குமே மீசையில்லை.

நிற்பவர் நால்வருள் மூவர் முன்னிருக்க ஒருவர் பின்னாலிருந்து எட்டிப் பார்க்கிறார். இளையோராய் இருக்கும் முனைவர் மூவருள்,

முதலிருவர் கருங்கொண்டையும் நன்கு வளர்ந்த தாடி மீசையுமாய்க் காட்சிதர, மூன்றாமவர் தாடி மீசையில் நம்பிக்கையற்றவராய்க் கொண்டையே போதுமென்று நிற்கிறார். இவரது தலையைச் சுற்றி ருத்திராக்க மாலை. மூவருமே மற்றவர்போல் துணியை முப்புரிநூல்போல் அணிந்துள்ளனர். கழுத்தில் சுவடியும், மேற்கைகளில் கங்கணமும் அணிந்து நடுவிலிருப்பவர் இரண்டு கைகளிலும் ஓலையேட்டொன்றைப் பிரித்துப் பிடித்துள்ளார். அதிலுள்ள செய்தி தம்மைத் துணுக்குறச் செய்துவிட்டாற் போன்றதொரு பார்வையுடன் வழக்காடி நிற்பவரை நோக்குமிவரைப் பார்த்தபடி வலப்புறத்தாரும் பின்னவரும் பார்வையிலேயே வியப்பின் விளிம்புகாட்டிக் கேள்விகள் தொடுக்க, கழுத்தில் ருத்திராக்க மாலையணிந்துள்ள வலப்புறத்தார் மட்டும், 'அவசரப்படவேண்டாம் பொறுங்கள்' என்பதுபோல் வலக்கையில் மெய்ப்பாடு காட்டுகிறார். இடப்புறத்தார் இந்த நிகழ்ச்சிப் பின்னலில் வியப்பின் உச்சிக்கே போனவராய்ச் சுவடிக்கட்டை மார்பின் பக்கவாட்டில் இடுக்கியிருக்கும் இடக்கையை விஸ்மயத்தில் மலர்த்தி, என்னவிது கொடுமை என்பதுபோல் பரிதாபப் பார்வை சிந்துகிறார்... நிற்பார் அனைவர் நெற்றியிலும் திருநீறு.

அறக்களத்தாரின் பல்வேறு உணர்வலைகளுக்குக் காரணமான சிவபெருமான் வலக்கையில் ஓலையும், இடக்கையில் குடையுமாய்ச் சுந்தரரை அடிமைப்படுத்தும் வகையில் வழக்கை நடத்திச் செல்ல, எதிரே சுந்தரர் செய்வதறியாதவராய், மாப்பிள்ளைக் கோலத்தில் மருட்சியுடன் நிற்கிறார். செவிகளில் குண்டலங்கள், கழுத்தில் கண்டிகை, கைகளில் கங்கணங்கள், வளைகள், இடுப்பில் பதக்கத்தோடு கூடிய அரைப்பட்டிகை, பச்சை வண்ணத்தில் அரைமறைக்கும் அழகிய பட்டுச்சிற்றாடை, தலையில் சிறியதொரு அடுக்கு மகுடம், மார்பில் முப்புரி நூலாய் மடித்த துணி எனக் கம்பீரமும் அழகும் மிளிர நிற்கும் நாவலூராரின் இருகைகளும் மார்புக்காய்த் திரும்பியுள்ளன. ஓவியச் சிதைவால் அக்கைகள் கூப்பியுள்ளனவா அல்லது நிகழ்வன கண்டு செய்வதறியாத நிலையில் ஒன்றையொன்று பற்றியவாறுள்ளனவா என்பதை அறியக்கூடவில்லை. வழக்குரைஞரின் உறுதி நிறைந்த எள்ளல் பார்வையும், இளநகையுடன் விளங்கும் இதழ்களும் வழக்கின் வெற்றி அவர் பக்கம்தான் என்பதை நிறுவிவிடுகின்றன.

(வளரும்)

## வாசகர்கள் கவனத்திற்கு....

பழங்காசு நான்கு இதழ்களையும் படித்திருக்கும் அறிஞர்களும் ஆர்வலர்களும் இவற்றின் அமைப்பு, இடம்பெறும் செய்திகள், கட்டுரைகள் ஆகியவற்றைப் பற்றித் தத்தம் கருத்துகளை எழுதுமாறு அன்புடன் வேண்டுகிறோம். புதியனவாகவும், பயனுள்ள பிற பகுதிகளைச் சேர்ப்பது பற்றியும் ஆர்வலர்களின் கருத்துகள் வரவேற்கப்படுகின்றன. பழங்காசு இதழ் மேலும் சிறக்க உங்களின் கருத்துக்களை எதிர்பார்க்கின்றோம்.

– ஆசிரியர், 'பழங்காசு'

# திருக்கோயிலைத் தெரிந்துகொள்வோம்:
## பாதச் சுவர் (ஸ்தம்பம்)



- ஸ்தபதி வே. இராமன்

திருக்கோயில் கட்டட அமைப்பில் நிலமட்டத்திலிருந்து இரண்டாவதாக அதிஷ்டானத்திற்கு மேலாக அமையப்பெறும் அங்கமே பாதச்சுவர் ஆகும். பாதச்சுவர் என்பது பாதச்சுவர்க்கட்டு (தாங்குதளம்) மேல்மட்டத்திலிருந்து பிரஸ்தரத்தின் முதல் உறுப்பான உத்தரத்தின் கீழ்ப்பகுதி வரையிலான இடைப்பட்ட பகுதியாகும். இந்தச் சுவரைப் பல சிறுசிறு பகுதிகளாகப் பிரித்துப் பாதங்களை இடம்பெறச் செய்து எழில்பெற செய்வதால் இப்பகுதியை பாதச் சுவர் என்று பெயரிட்டு அழைக்காலாயினர். **பித்தி** எனச் சொல்வழக்கும் உண்டு.

பாதத்தை ஸ்தம்பம், தூண், கால் எனவும் கூறுவதுண்டு. தலிபம், தலி, பாரம், பாரகம், ஸ்தூபினம், ஸ்தாணு, கம்பம், ஜெயம், ஜங்கை, அங்கரி, சரணம் எனப் பல பெயர்களாலும் பெயரிட்டு அழைப்பதுண்டு. மானசார சிற்பநூல் இதனை ஆரணி எனக்கூறுகிறது.

மரத்தால் செய்யப்பட்ட ஸ்தம்பத்தை தாரு ஸ்தம்பம் என்றும், சுவரில் செய்யப்படும் ஸ்தம்பத்தை குட்ய ஸ்தம்பம் என்றும் ஸ்தபதிகள் சொல்வழக்கில் கூறுவர். அதிஷ்டானத்தின் மேல் உறுப்பான யாளிவரி (பூமிதேசம்) மேல்மட்டத்திலிருந்து உத்திரம் கீழ்மட்டம் வரை அமையும் ஸ்தம்பத்தை **ஜஷால ஸ்தம்பம்** என்றும், அதிஷ்டானத்தின் முதல் உறுப்பான உபானம் முதல் உத்திரம் கீழ்மட்டம் வரை அமையும் ஸ்தம்பத்தை **நிகாத ஸ்தம்பம்** என்றும் இடம்பெறும் கட்டுமான அதிஷ்டானத்தைக் கொண்டு வேறுபடுத்திக் காசியப சிற்பநூல் எடுத்துக்கூறுகிறது.

தூண்களின் அமைப்பு முறைகளைக் கொண்டு மூன்று வகையாக பிரித்தறியலாம். அவை முறையே

1. அரைத் தூண்கள் (சுவரிடையே தூணின் ஒரு பகுதியை மட்டும் வெளிப்படுத்துதல்)

2. மண்டபத் தூண்கள் (கட்டடங்களைத் தாங்கி நிற்க கூடியவை)

3. தனித்து நிற்கும் தூண்கள்

(கோயிலின் வெளியே தனித்து நிற்கும் தூண்) ஆகும்.

இவற்றுள் அரைத்தூண்கள் என்பன முழுமையாக காண இயலாது. இவை சுவருடன் இணைத்தே கட்டப்படும் கட்டுமானப் பகுதியாகும். மண்டபத் தூண்கள் என்பவை மேற்கூரை உத்தரப் பகுதியைத் தாங்கி நிற்கும் பயன்பாடுடைய கட்டடப் பகுதியாகும். அலங்கார சிற்றுறுப்புகள் என்பது தூண்களில் புற வெளிப்பாடாகத் தோற்றமளித்தாலும் கட்டடங்களில், மண்டபங்களில் அவை கூரையின் உத்தரப்பகுதியைத் தாங்கி நிற்பதற்காகவே

கட்டப்படுபவையாகும். மூன்றாம் வகையாகிய தனித்து நிற்கும் தூண்கள் என்பவை சுவர் பகுதியில் இணைத்துக் கட்டப்பட்டு உள்ளவையாகவோ அல்லது மண்டபத்தில் நிற்பவையாகவோ இல்லாதவையாகும். ஒரு தூண் நிற்பது போன்றுள்ளதால் இது தனித்து நிற்கும் தூண் எனப் பெயர் பெறுகிறது. (எ.டு.) விஷ்ணு கோயிலில் இடம்பெறும் கருட ஸ்தம்பம்.

### இறைவடிவமைப்பில் தூண்கள்

தூண் அமையும் வடிவமைப்பைக் கொண்டு தூண்களுக்குப் பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. தூணின் அடிமுதல் தலைப்பாகம் வரை சதுரவடிவமாய் அமையும் தூண் **பிரம்மகாந்தம்** என்றும்; தூண் அமைப்பு எண்பட்டை வடிவமாக அமையுமானால் **விஷ்ணுகாந்தம்** என்றும்; வட்டவடிவமாக அமையுமானால் **ருத்ரகாந்தம்** என்றும் கூறப்படுவதுண்டு. இத்தூண்களின் பெயர்கள் யாவும் இறைவனது பெயரையே கொண்டிருப்பது நினைவுகூரத்தக்கது.

மேலும் தூண் அமைப்பானது பதினாறு பட்டை வடிவமாக அமைக்கப்படும்போது **சந்திரகாந்தம்** என்றும்; அடியும் தலையும் சதுரவடிவமாகவும், இடைப்பட்ட பகுதி எண்பட்டை வடிவில் அமையும் தூண் அமைப்பை **மத்யருத்ரகாந்தம்** என்றும்; அடிப்பகுதி சதுரவடிவமாகவும் நடுப்பகுதி எண்பட்டை வடிவமாகவும், தலைப்பகுதி வட்டவடிவமாகவும் அமையுமானால் **சிவகாந்தம்** என்றும் பெயர்பெறுகின்றன. இவையன்றித் திருக்கோயில் கட்டமைப்பில் பல தூண்கள் காணப்பெறுகின்றன. அவை முறையே

| | | |
|---|---|---|
| சதுரக்கால் | எண்பட்டைக்கால் | பதினாறுபட்டைக்கால் |
| விருத்தக்கால் | பத்திரிப்புக்கால் | பித்திக்கால் |
| பத்திக்கால் | கர்ணக்கூடக்கால் | பஞ்சரக்கால் |
| கும்ப பஞ்சரக்கால் | கோஷ்டக்கால் | சித்திரகண்டக்கால் |
| பிள்ளைக்கால் | அணியொட்டிக்கால் | கர்ணக்கால் |
| யாழிக்கால் | சிம்மக்கால் | துதியாழிக்கால் |

### தூண் உறுப்புகள்

தூண் உறுப்புகள் கீழிருந்து மேலாகச் சதுரம், உடல், தொங்குமாலை, மாலைக்கட்டு, பத்மக்கட்டு, கலசம், தாடி, குடம், பலிகை, பலகை, வீரகண்டம், போதிகை என்பனவாகும்.

### வேதிகை

இந்த உறுப்பானது தூணின் அடிப்பகுதியில் இடம்பெறும் ஓர் அலங்கார உறுப்பாகும். தூணிற்கு அழகு சேர்ப்பதால் இதனை **பாதபூஷணம்** எனச் சிற்பநூல் கூறும். வேதிகைத் திருக்கோயில் அமைப்பில் அதிஷ்டானத்தின் மேல்மட்டம், நிலங்கள்தோறும், பூமிதேசமான யாளமேல்மட்டத்தில் இடம்பெறும். கர்ணக்கூடு மற்றும்

முகச்சாலை அமைப்பின் முதல் உறுப்பாகவும், சிகர கிரிவத்தின் கீழும் இதை அமைத்து அணி செய்திடுவர். பொதுவாக வேதிகையானது கண்டம், கம்பு, பத்மம், நாவடை என்ற சிற்றுறுப்புகளைக் கொண்டு அமையும் எனலாம். தூண் அமைப்பில் வேதிகை இடம்பெறாமலும் அமைக்கலாம்.

பொதுவாக, சில ஆய்வாளர்கள் அதிஷ்டானத்துடன் வேதிகையையும் சேர்த்துக் கூறுவதுண்டு. வேதிகை அதிஷ்டானத்தின் உறுப்பு அல்ல. பாதச்சுவரின் உறுப்பாகவே கொள்ளப்பட வேண்டும். வேதிகை கண்டம் சுவரில் மேலே எழும் பாதம் தொடர்ச்சியாகக் கால்கள் என்றும் காட்டப்படுவது மரபாகும். இதனை **களபாதம்** என்றும், **தூண்டிகள்** என்றும் கூறுவர். கண்டப் பகுதியில் சிற்றுருவச் சிற்பங்கள் இடம்பெறச் செய்வது சோழர்களுக்கே உரிய கலை முறையாகும். புள்ளமங்கை, திருச்சென்னம்பூண்டி, காமரசவல்லி, துடையூர், கோபுரப்பட்டி, சோழமாதேவி ஆகிய ஊர்களில் அமைந்துள்ள கோயில்களில் இத்தகைய சிற்பத் தொகுதிகளைக் காண முடிகிறது.

பொதுவாக, சுவர் பகுதியில் தேவகோஷ்டங்களும், மகரதோரணங்களும், கும்ப பஞ்சரங்களும் இடம்பெறச்செய்து கட்டடப்பகுதியை மேலும் எழில் பெறச் செய்வர். கருவறை புறச்சுவர் மையமாக இடம்பெறும் தேவகோஷ்டத்தில் மூலவருக்கு ஏற்பப் படிமங்களை நிறுத்திடுவர்.

சோழர்காலக் கோயில்களில் சிலவற்றுள் கீழ்கண்டவாறு கோஷ்டச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

| ஊர் | கோயிலின் பார்வை | தெற்கு | மேற்கு | வடக்கு | கிழக்கு |
|---|---|---|---|---|---|
| துடையூர் | கிழக்கு | வீணாதர தெட்சிணாமூர்த்தி | ஆலிங்கன சந்திரசேகர் | பிரம்மா | – |
| திருச்செந்துறை | கிழக்கு | ரிஷபாந்திகர் | – | – | – |
| திருத்தவத்துறை | மேற்கு | வீணாதர தெட்சிணாமூர்த்தி | – | பிட்சாடணர் | அர்த்தநாரீஸ்வரர் |
| கீழையூர் | மேற்கு | தெட்சிணாமூர்த்தி | – | பிரம்மா | முருகன் |
| எறும்பியூர் | கிழக்கு | தெட்சிணாமூர்த்தி | ஹரிஹரன் | பிரம்மா | – |
| பெருங்குடி | கிழக்கு | தெட்சிணாமூர்த்தி | அர்த்தநா–ரீஸ்வரர் | பிரம்மா | – |
| கோபுரப்பட்டி | மேற்கு | தெட்சிணாமூர்த்தி | – | பிரம்மா | ஹரிஹரன் |
| சோழமாதேவி | கிழக்கு | தெட்சிணாமூர்த்தி | விஷ்ணு | பிரம்மா | – |

**ஜாலகம்**

ஜாலகம் என்பது பாதவர்க்கத்தின் இருதூண்களுக்கு இடையே அமைக்கப்படும் ஓர் அலங்கார அணியாகும். இதனைப் பல கணி என்பர். இது பல துவாரங்களைக் கொண்ட ஜன்னல் ஆகும். கோநேத்திரம், ஹஸ்திநேத்ரம், நந்தியாவர்த்தம், அப்ஜவர்த்தம் என வகைப்படுத்திச் சிற்பநூல் கூறுகிறது.

### விருத்தஸ் புடிதம்

திருக்கோயில் கருவறைப் புறச்சுவர் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு முன்பின் வந்ததாய் எழிலாய் அமைப்பர். இதனை கர்ணக்கூடு, அகாரை, முகச்சாலை, பத்தி எனக் கூறுவர். கர்ணக்கூடு பத்தியிலிருந்து அகாரைப்பத்தி சற்று உள்ளடக்கியதாய் அமையப்பெறும். இப்பகுதி வெறுமையாக இருப்பின் கட்டடம் அழகு பெறாது. எனவே இப்பகுதியில் பல வகையான அணிகள் செய்யப்படுகின்றன. இப்பத்தியமைப்பில் இடம்பெறும் ஒரு அணியே **விருத்தஸ்புடிதம்** ஆகும்.

**ஸ்புட்** என்ற சொல்லிற்கு ஒளிப்பெறச் செய்தல், பிரகாசம், தெளிவு எனப் பொருள் கொள்ளலாம்.

### கும்பலதா

விருத்தஸ்புடித அமைப்பை அடிப்படையாகக் கொண்டு ஒரு சில மாறுதல்களோடு அமைக்கப்படும் அங்கம் கும்பலதாவாகும். இவ்வமைப்பில் சிறப்புமிகு அங்கமாக இடம் பெறுவது கும்பமும், லதாவும் ஆகும். லதா என்பது கொடி எனப் பொருள்படும்.

நகரத்தார் கோயில்களில் இவ்வணியின் வளர்ச்சியினை நன்கு காணலாம்.

### தோரணம்

பொதுவாக, தோரணங்கள் மூன்று வகைப்படும். அவை முறையே 1. சுவரில் செய்யப்படும் தோரணம் 2) வாயிலில் செய்யப்படும் தோரணம் 3) ஸ்தம்பங்களில் செய்யப்படும் தோரணம் ஆகும். இதனையே குட்ய தோரணம், துவார தோரணம், ஸ்தம்ப தோரணம் என்றும் சொல்லப்படும். மேலும் இத்தோரணங்களில் செய்யப்படும் அலங்காரங்களையும், உருவங்களையும் கருத்தில் கொண்டு மேலும் மூன்று வகையாகப் பிரிக்கப்படுகிறது. இதனைப் பத்ரதோரணம், மகரதோரணம், சித்திரதோரணம் என்றழைப்பர். சிறப்புமிக்க மகர தோரண அமைப்பை கீழையூர் அவணிகந்தர்ப்ப ஈசுவரகிருகம், திருச்செந்துறை, கோபுரப்பட்டி ஆகிய ஊர்களில் அமைந்துள்ள கோயில்களில் காணலாம்.

### பயன்பட்ட நூல்கள்


1. காஸ்யபம் சிற்ப நூல் – தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகம் வெளியீடு.
2. மன்னார்குடி அருள்மிகு இராஜகோபாலசுவாமி திருக்கோயில் பெருவிழாமலர் கருட ஸ்தம்பம். டாக்டர் இராசு. பவுன்துரை.
3. வரலாறு இதழ் ஆகஸ்ட் 1993.
   அமலிசுவரம் திருக்கோயில் அமைப்பு முறை – ஸ்தபதி வே. இராமன்
4. மரபுக் கட்டடக்கலை. கலைச்செம்மல் கோ. திருஞானம் ஓவியர் – சிற்பி.

**எண்பட்டைக்கால்** (சோழர்காலம்)




**சதுரக்கால்** (சோழர்காலம்)




**சதுரக்கால்** (சோழர்காலம்)



**எண்பட்டைக்கால்**




**கும்பலதா**




**விருத்தஸ்புடிதம்**



# மனம் திறந்து..

தமிழ் இதழியல் துறையில் முற்றிலும் தனித்தன்மை உடைய ஓர் இதழாக விளங்குகிறது 'பழங்காசு'. தமிழ்நாட்டில் பழங்காலத்திலிருந்து வெவ்வேறு காலக்கட்டங்களில் புழக்கத்தில் இருந்துவந்த பலவகையான காசுகள் பற்றிய அரிய தகவல்களையும், வரலாற்று ஆய்வுகளையும், படங்களோடு கட்டுரைகளாக வெளியிட்டு வருவது பாராட்டப்பட வேண்டிய சாதனையாகும். மற்றும் கல்வெட்டுகள், செப்பேடுகள், கோயில் கலை, பண்டைய இலக்கியங்கள் முதலியன பற்றிய ஆய்வுகரைகளையும் 'பழங்காசு' வெளியிட்டு வருவது, அதனைப் போற்றுதலுக்குரிய களஞ்சியமாகத் திகழச் செய்கிறது. வாழ்வில் வெவ்வேறு துறைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் பழங்காசுகள், கல்வெட்டுகள், செப்பேடுகள், கோயில் கலை முதலியவற்றிலும் ஆர்வம் கொண்டு, முனைப்புடன் ஆய்வுகள் செய்து, தாங்கள் கண்டறிந்த உண்மைகளைச் சிறப்பான முறையில் கட்டுரைகளாகப் பதிவு செய்வதற்குப் 'பழங்காசு' களமாக விளங்குவது உயரிய நற்பணி ஆகும். உங்களது சீரிய முயற்சி வெற்றிகரமாக வளர்ந்து, அரிய பல வரலாற்று உண்மைகளைத் திரட்டி தந்து பெயரும் புகழும் பெறுவதாக.

*- வல்லிக்கண்ணன், சென்னை.*

*சாகித்ய அகாடமி விருது பெற்ற எழுத்தாளர்*

முதல் இதழ் தலையங்கத்தில் "மக்களுடையவரலாறு – மக்களுக் காகவே வரலாறு! – இதுவே பழங்காசின் முழக்கம்" என்று திட்ட வட்டமாகக் கூறியிருப்பது, போற்றத்தக்கது. நாணவியல் வரலாற்றியல் சிந்தனைகளைத் தமிழ் மக்களிடையே வளர்த்து "வரலாற்று ஆர்வம் ஒரு மக்கள் இயக்கமாக வளர்ந்தோங்கத் தாங்கள் மேற்கொண்டுள்ள முயற்சிகளின் வெளிப்பாடாக, இவ்விதழ் விளங்குகிறது. இந்தத் தனித்தன்மை வாய்ந்த, அரிய காலாண்டிதழ், அரசு நூலகங்களிலும், கல்லூரி நூலகங்களிலும், தனியார் நூலகங்களிலும் இடம்பெற வேண்டும் என விழைகிறேன்; ஆவன செய்க. "பொதுமக்கள் நலம் நாடிப் புதுக் கருத்தைச் சொல்க!"என்றார், புரட்சிக்கவி பாரதிதாசன். இதைப் 'பழங்காசு ஆசிரியர் குழு மனத்திற்கொள்ளும் என நம்புகிறேன். தங்கள் குறிக்கோள் மிக உயர்ந்தது. அதன் பல்வேறு போக்குகளும், தன்மைகளும் ஒரு கூட்டு முயற்சியாக எளிய சுவையான தமிழில் வாசகர் களுக்குத் தொடர்ந்து கிடைத்திட வேண்டும். பேராசிரியர் நா. வானமாமலை, சாத்தான்குளம். அ. இராகவன் முதலிய ஆய்வாளர்களின் படைப்புகளை ஓரளவு அறிந்தவன் என்னும் முறையில் அவர்களது வரலாற்றுப் பார்வையைப் பழங்காசு வளர்க்க வேண்டும் என விழைகிறேன்.

*- வாழ்த்துக்களுடன், தி.க. சிவசங்கரன், திருநெல்வேலி.*

*சாகித்ய அகாடமி விருது பெற்ற எழுத்தாளர்*

பழங்காசு இதழ் 3 வந்தது அன்புடன் பெற்று மகிழ்ந்தேன். தாங்கள் செய்து வரும் வரலாறு பழங்காசு இயல் பற்றிய அரும்பணிகள் உச்சிமேல் வைத்துப் பாராட்டத்தக்கன–வென்பதை வெளியான மூன்று இதழ்களும் கூறிவிட்டன.

*- ஆசான், புலவர் ஐ. ராமசாமி, போளுவாம்பட்டி*

பழங்காசு இதழ் வண்ண வடிவமைப்பில் தகவல்களுக்கேற்ற புகைப்படங்களும் வரைபடங்களும் தந்து தகவல் பெட்டகமாகவே விளங்கி வருகிறது. காசுகள் கல்வெட்டுகள், கலைச்சிற்பங்கள் கட்டிடக்கலை நுட்பங்கள் என்று பழங்காசின் பரிமாணம் விரிவடைகிறது. நாணயவியலுக்கு இன்னும் அதிக முக்கியத்துவம் தரலாம். கல்வெட்டுகளும் கலைகள், சார்ந்த விஷயங்களும் இடம்பெறலாம்.

*- சதீஷ் சிஸரோ உதயதாரகை கலைக்கழகம், படந்தாலுமூடு.*

தமிழ்நாட்டின் வரலாற்றில் இது புதுமையான புரட்சியான பணி
வரலாறு ஆகும் வரலாற்றுப் பணி
நாணயங்கள், வரலாற்றின் சுடர்விடும் விழிகள்
அவை கண்டடைதல் – தமிழ் உலகுக்கு வழங்குதல் அரிய செயல் பாராட்டுகிறேன்.
இதழில் கட்டுரைகள் தரமானவையா உள்ளன
நாணயங்கள் அருமை! அருமை!
வரலாற்று இதழாக வடிவமைக்கப்பட்டிருப்பது தட்டுப்பாடு இல்லை என்ற உறுதியை உருவாக்கும்
ஆழமான பார்வையோடு படைப்புகள், வழங்கும் சான்றோர்கள் மிகவும் பாராட்டுக்குரியவர்கள்.

*– கு. பச்சைமால், தமிழாலயம், சாமித்தோப்பு, குமரி மாவட்டம்-629 704.*

இப்பழங்காசு தொல்லியல் ஆர்வலர்களுக்கும் தொல்லியல் பயிலும் மாணவர்களுக்கும் மிகவும் பயனுள்ளதாக அமையும். இப்பழங்காசு பாதுகாக்க வேண்டிய பெட்டகமாகும். திருமிகு ஸ்தபதி வே. இராமன் எழுதும் திருக்கோயிலைத் தெரிந்துகொள்வோம் பகுதி என்போன்றோருக்கு மிக்க பயனுள்ளதாக அமையும்

*– கலைச்செம்மல் கோ. திருஞானம், மாமல்லபுரம் – 603 104.*

மிக அருமையான படைப்பு பழங்காசு. மிகக் குறைந்த விலையில் வரலாற்றுச் செய்திகள் தாங்கி அழகிய அமைப்பில் தாங்கள் வெளியிடும் இவ்விதழ் பாராட்டுக்கும் வாழ்த்துக்கும் உரியது. நாணயவியல் துறையில் புதிய வரலாறு அமைக்கும் இதழ் தொய்வில்லாமல், தொடர்ந்த இந்த வெற்றியுடன் பீடுநடை போட என் உளமார்ந்த விழைவு! வெல்க உம் பணி! என் ஆதரவு என்றும் உண்டு.

*-ந. வெற்றியழகன், எம்.ஏ., பி.எட்., புள்ளம்பாடி-621 711.*

தாங்கள் புதிதாக கண்டுபிடிக்கப்படும் கல்வெட்டுகளை வெளியிடுவது எனக்கும் மிகவும் உதவிகரமாக உள்ளது. அடுத்து, தமிழில் ஏராளமான பத்திரிகைகள் வருகின்றன. மக்களும் அரசியல், சினிமா பற்றிய பத்திரிகைகளை என்ன விலை சொன்னாலும் வாங்குகிறார்கள். ஆனால் "பழங்காசு" போன்ற இதழ்கள் அந்த அளவு விற்பனை ஆவதில்லை. அதுதான் நம் நாட்டின் விதி. பழங்காசு இதழ் தொடர்ந்து வெளியிடுமாறும் கேட்டுக்கொள்கிறேன். உங்களது இந்த முயற்சி தொடர என் வாழ்த்துக்கள்.

*– டி. பிரகாஷ், சென்னை.*

பழங்காசிலுள்ள கட்டுரைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முத்து. தங்கள் கூட்டு முயற்சியினால் விளைந்த இப்பயனை அனைவரும் பெற்று இன்புறுவார்கள் என்பது திண்ணம். இதுபோல் வெளியீடுகள் அடுத்தடுத்து வெளிவர எங்களது மனமார்ந்த வாழ்த்துக்களை உரித்தாக்குகிறோம்.

*– எம். வீரமணி, கிருஷ்ணகிரி.*

பழங்காசில் அடங்கியிருக்கும் கட்டுரைகள் மிகவும் மேன்மையாக இருக்கின்றன. தங்களுடைய சீரிய முயற்சிக்கு என் மனமார்ந்த பாராட்டுகள். தங்கள் பணி மேலும் சிறந்து விளங்குவதாக.

*– எஸ். (அ)ரங்கநாதன், திருச்சி-17.*

மிக அற்புதமான கிடைத்தற்கரிய நாணயங்களைப் பற்றிய விதவிதமான கட்டுரைகள் பாராட்டுக்குரியன. அட்டையில் காசு 3 என்று பிரசுரித்திருப்பது உண்மைதானா? அல்லது 300 என்றிருக்கவேண்டுமா தெரியவில்லை.

*– சு. விஜயகுமார், ஆசிரியர் 'குரோம்பேட்டை செய்திகள்', சென்னை-44.*

தமிழர்களின் தொன்மையை ஆய்வதற்கு பாராட்டுகள். புதுக்கோட்டை ஆவணங்கள் அருமை. மொழியியற் களத்திலும் ஆய்வுசெய்யப்பட வேண்டும். சோழமாதேவி கோயில் கட்டுரை பற்றி தி.வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்களின் ஆய்வுக்கட்டுரை படித்ததாக ஞாபகம்.

*- கோ. தெய்வசிகாமணி (நடவு - காலாண்டிதழ்), விருத்தாசலம்.*

பழங்காசு பற்றியும், கல்வெட்டுப் பற்றியும் பல்வேறு வரலாற்று செய்திகளை வாசகர்க்ளின் பார்வைக்குக் கொண்டு வந்த பழங்காசு இதழுக்கு நன்றி. ஒவ்வோர்அறிஞரும் ஆராய்ச்சி கண்டுபிடிப்புகளுடன் பல அரிய தகவல்களையும் தொகுத்துக் கட்டுரையாக வெளியிட்டு உள்ளனர். 'பழங்காசு', வரலாற்று மாணவர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும்.

*- செ. கோவிந்தராஜன், ஆசிரியர் - 'இப்படிக்கு' மாத இதழ், திருச்சி-21.*

"பழங்காசு காலாண்டிதழ் வரலாற்றியலின் சான்றுகளான பண்டைய நாணயங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், இலக்கியங்கள்,கோவில் கலை கலை பற்யி ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி வரும் அரிய களஞ்சியமாக உதயமாகியிருக்கிறது. வரலாற்று ஆர்வலர்கள் இதைப் பருகி தம் அறிவுத்தாகத்தைத் தீர்த்துக்கொள்ளலாம். உயர்ந்த தமிழ்நடை, பிழையற்ற தெளிவான பிரசுரம், நிழற்படங்கள், ஆய்வின் அடிப்படையில் அறிஞர் பெருமக்களால் படைக்கப்பட்ட கட்டுரைகள் அடங்கிய பழங்காசு மாணவர்களுக்கும், வரலாற்று ஆசிரியர்க்கும் ஒரு பதுப்புதையல்.

*வரலாற்றாசிரியர் மேத்யு அவர்கள்,*

*- 'உங்கள் பாரதி' ஜுலை-செப்டம்பர் (காலாண்டு) இதழில் புதுச்சேரி-10.*

பண்டைய நாகரிகத்தையும் வாழ்வியலையும் அறிய விருப்பமானவர்கள் படிக்க வேண்டிய இதழ் பழங்காசு; பழைய நாணயங்கள், செப்பேடுகள் அகழாய்வுகளில் கிடைத்த அடையாளங்கள் ஆகியவை பற்றித் தொகுப்பாக விவரங்கள் கொண்டு வெளிவரும் காலாண்டிதழ்

*- எஸ்.கே.பி.அவர்கள், ஓம் சக்தி செப்டம்பர் இதழில், கோவை-2.*

## கட்டுரையாளர்கள்


1. க.ஆ. திருஞானசம்பந்தம், M.A., M.Phil.,
இயக்குனர்
கொங்கு நாணயவியல் ஆய்வு மையம்
87, சின்ன மாரியம்மன் கோவில் தெரு
ஈரோடு – 638 003.

2. முனைவர் ச. இரவி
தமிழ் விரிவுரையாளர்
பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர் – 641 014.

3. ஆசான் புலவர் ஐ. இராமசாமி
இக்கரை போளுவாம்பட்டி
கோவை மாவட்டம்–641 109.

4. செந்தீ. நடராசன்
(செயலாளர், மாநில இலக்கியக் குழு
தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம்)
36/121, செந்தில் இல்லலம்
கல்படித் தெரு, நாகர்கோவில்–629 001.

5. கி. ஸ்ரீதரன், பதிவு அலுவலர்,
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை,
14-D, அண்ணா காலனி, திருச்சிராப்பள்ளி–20.

6. கரு. இராசேந்திரன்
மேலப்பனையூர், புதுக்கோட்டை மாவட்டம்.

7. 'சரித்திரச் செம்மல்' ச. கிருஷ்ணமூர்த்தி
தொல்லியல் அலுவலர்,
அரசு தொல்லியல் துறை, சிதம்பரம்–608 001.

8. Er. லெ. சுபாஷ் சந்திரபோஸ்
நிறுவனர், பழந்தமிழர் வரலாற்றுப் பேரவை
43-B, புதுரெட்டித் தெரு, பீமநகர்,
திருச்சிராப்பள்ளி – 620 001.

9. தே. கோபாலன்
தொல்லியல் துறை, நாகர்கோவில்

10. இரா. திருமலைநம்பி, ஆணையர் (ஓய்வு)
திருமலைராயசமுத்திரம்,
கைக்குறிச்சி (அ.நி)
புதுக்கோட்டை–622 303.

11. முனைவர் டாக்டர் இரா. கலைக்கோவன்
M.B.B.S., D.O., M.A., M.A., Ph.D.,
48, புத்தூர் நெடுஞ்சாலை
திருச்சிராப்பள்ளி – 620 017.

12. ஸ்தபதி வே. இராமன் D.S.A.,
38/5, புதிய சுற்றுலா மாளிகைக் குடியிருப்பு
திருச்சிராப்பள்ளி – 620 020.

## புரவலர்கள்

திரு. ஏ.எஸ். நாகேந்திரன்,
பெங்களூர்-52.

திரு. சாலமன் பாப்பையா
மதுரை-16.

திருமதி. மு. ஜெயந்தி
நெய்வேலி-3.

திரு. ஜி. முத்துசாமி
சென்னை-44.

திரு. லே. சுபாஸ் சந்திரபோஸ்
திருச்சிராப்பள்ளி-1.

திரு. பி. ஆல்பர்ட் ராஸ்
திருச்சிராப்பள்ளி-13.

திரு. இரா. தமிழாதன், கூடலூர்.

திரு. எப். அந்தோணிராஜ்,
திருச்சிராப்பள்ளி-19.

பேரா. ச. மெய்யப்பன்
மெய்யப்பன் தமிழ் ஆய்வகம், சிதம்பரம்-1.

திரு. கே.ஜி. முரளிதரன்
திருச்சிராப்பள்ளி - 20.

திரு. மோதி. எஸ். இராஜகோபால்
திருச்சிராப்பள்ளி - 8.

'நினைவில் வாழும்'
திரு. ஏ.எஸ். லோகேஸ்வரன்,
பெங்களூர்-52.

## வாழ்நாள் நன்கொடையாளர்கள்

திரு. இராஜேந்திரதேவன்
திருச்சிராப்பள்ளி-3.

திரு. சி.எம். சுப்ரமணியன்
திருச்சிராப்பள்ளி-6.

திரு. டி. சிதம்பரராஜன்
திருச்சிராப்பள்ளி-26.

திரு. கே.எச் தாசரதி
திருச்சிராப்பள்ளி-3.

பி.எஸ். ஜீஹைனாபைசல்,
அடியக்கமங்கலம், திருவாரூர் மாவட்டம்.

திரு. ஏ. ரெங்கராஜன்
திருச்சிராப்பள்ளி-20.

பேரா. பரமு. புஷ்பரட்ணம்
யாழ்ப்பாணம், இலங்கை.

திரு. என். கஸ்தூரிரெங்கன்
திருவரங்கம், திருச்சிராப்பள்ளி-6.

திரு. வி. பாரதமணி
திருச்சிராப்பள்ளி-14.

திரு. பி. தமிழகன்
திருச்சிராப்பள்ளி-23.

திரு. சி. ராஜ்குமார்
திருச்சிராப்பள்ளி-3.

திரு. ஏ. விக்டர்
திருச்சிராப்பள்ளி-14.

திரு. என். கலியமூர்த்தி
திருச்சிராப்பள்ளி-14.

திரு. டி.ஆர். சிவக்குமாரன்
திருச்சிராப்பள்ளி - 8.

திரு. எம். முகமது பரகத் அலி
திருச்சிராப்பள்ளி - 21.

திரு. என். கே. பாரதி ஜீவா
திருச்சிராப்பள்ளி - 14.

திரு. ச. இரவி
காளப்பட்டி, கோவை மாவட்டம்.

திரு. செ.இரா. இரவிச்சந்திரன்
கோயம்புத்தூர்-641 001.

திரு. பி. இராமச்சந்திரமூர்த்தி
திருச்சிராப்பள்ளி - 620 014.

திரு. வி. கோபாலகிருஷ்ணன்
திருச்சிராப்பள்ளி - 620 014.

த.சி.ச. உறுப்பிதழ் : 264/2001 TASNA Regd. No. 264/2001


பழங்காசு மின்னஞ்சல் (E-mail) : pazhangasu@usa.net
pazhangasu@yahoo.com

ஓரிதழ் நன்கொடை : உரூ. 15/– (தனிச்சுற்றுக்கு மட்டும்)

# இதய அஞ்சலி

## நினைவில் வாழும் திரு. A.S. லோகேஸ்வரன்





**2.11.1963 - 20.9.2001**

பழங்காசின் புரவலரும் (பெங்களூர்) நாகமாணிக்கம் இன்டஸ்ட்ரீஸ் உரிமையாளருமான திரு. A.S. லோகேஸ்வரன் அவர்கள் 29.9.2001 அன்று நம்மைத் துயரில் ஆழ்த்திவிட்டு அமரரானார். கர்னாடகத்தில் வாழ்ந்தவரானாலும், தமிழ் மீதும், தமிழர் வரலாற்றின் மீதும் ஆழ்ந்த பற்று கொண்டு விளங்கினார். திருச்சிராப்பள்ளி நாணயவியல் கழகத்தின் செயல்பாடுகளுக்கு ஆர்வமுடன் உதவினார். பழங்காசு தொடங்கப்பட்டபோதே, தன்னை அதன் புரவலராக இணைத்துக் கொண்டு ஊக்குவித்தப் பெருந்தகையாளர் அவர். அவரின மறைவுக்குப் பழங்காசு கண்ணீர் மல்க அஞ்சலி செலுத்துகிறது. அன்னாரைப் பிரிந்துவாடும் அவரின் குடும்பத்தினரோடும், உறவினர்களோடும், பழங்காசு சோகச் சுமையைப் பகிர்ந்துகொள்கிறது.

கிரியா ஸ்கிரீன்ஸ் (ஆப்செட்) திருச்சி–8. © 711231.